


ஓம்
தத் ஸத்
பரப்பிரஹ்மணே நம:

# துறவு நிலை விளக்கம்.



ஸ்ரீமத் - தே. அ. சாமி குப்புசாமி அவர்களால்
இயற்றப்பட்டது.



இதன் விலை] 1928. [அணா 4.

ஓம்
தத் ஸத்
பரப்பிரஹ்மணே நம:.

# துறவுநிலை விளக்கம்.

இது
திருத்துருத்தி - இந்திரபீடம்
ஸ்ரீ காபாத்திர சுவாமிக ளாதீனம்
ஸ்ரீ ஈசூர் - சச்சிதாநந்த சுவாமிகள் திருவடித்தொண்டர்
39-ஆவது பட்டாளம் சுபேதார் மேஜராயிருந்த
ஆத்மஞானி
ஸ்ரீ ஐயாக்கண்ணு தேசிக மூர்த்திகளின்
பாதசேகரராகிய
ஸ்ரீமத் - தே. அ. சாமி குப்புசாமி அவர்களால்
இயற்றப்பட்டு,

இலக்கண இலக்கிய வேதாந்த தருக்க போதகாசிரியர்
மகாவித்துவான்
ஸ்ரீமத். கோ. வடிவேலு செட்டியா ரவர்களால்
பார்வையிடப்பட்டு,

இந்நூலாசிரியரின் திருவடித்தொண்டர்
காளத்தி - இ. சிதம்பரசாமி புராணிகரவர்களால்
சென்னை.
அமெரிக்கன் டைமெண்ட் பிரஸில் பதிப்பிக்கப்பட்டது.

---



விலை] **1928.** [அணா 4.

# சாத்துகவிகள்.

ஸ்ரீ ஜகத்குருபீடம்
நியாய சந்திர வேதாந்த பாஸ்கரரும்
ஸ்ரீ ஆத்மபுராண ஸ்ரீ பகவத்கீதா கூடார்த்ததீபிகை முதலிய
நூல்களின் மொழிபெயர்ப்பாசிரியருமாகிய
ஸ்ரீமத் - மகா மண்டலேசுவர வீரசேகர
**சுப்பைய ஞான தேசிகேந்திர சுவாமியவர்களியற்றிய**

**அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.**

உறவுநிலை யல்லவெனச் சுகர்முதலோர் கொண்டநிலை யுற்று நோக்கித்
துறவுநிலை நல்லதெனப் பெரியோர்க ளுடம்புமிகை சொலவுங் காணா
அறவுநிலை யில்லதினுங் கோடிமிகை யறியார்க ளறிந்து வாழத்
துறவுநிலை விளக்கம்வைத்தான் சாமிகுப்பு சாமியெனுந் தொடர்பி
[லானே.

---

திருக்கைலாய பரம்பரைத் திருத்துறையூராதீனம்
விருத்தாசலம்
ஸ்ரீ குமாரதேவ ஸ்வாமிகள் மரபு
**ஸ்ரீமத்-, தணிகாசலச் சிவப்பிரகாச ஸ்வாமிகளியற்றிய**

**நேரிசை வெண்பா.**

கருணை வசவக் கதிர்ஞாலந் தோன்றி
அருளை வகுத்த அமைப்பில்—தெருளும்
அறநிலைமீ த ரத்வைத சாமிகுப்பு சாமி
துறவுநிலை சொற்றார் துணிந்து.

ஒழுக்கத்து நீத்தா ருயர்வு முளத்தி
னிழுக்கத்து நீத்தா ரிகழ்வும்—வழுத்துந்
துறவு நிலைவிளக்கத் தூய வொழுக்கம்
உறுதி பயக்கு முயிர்க்கு.

---

ஓம்.

தத்சத்

பரப்பிரஹ்மணே நம:

# சாத்துகவிகள்.



கோயிலூர் - பரம்பரை ஸ்ரீமத், தஞ்சை

பிர்மாநந்த யோகீஸ்வர சுவாமியவர்களியற்றிய

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

பொல்லாத மதப்பேயர் புறகிடவே ஞானப்போர் புரிந்து வக்கும்
வல்லாளன் சாமிகுப்பு சாமியெனும் வரகவிஞன் மகித லத்தி
லெல்லாரு மின்பநிலை யெய்திடவே கருணையினு லெழுதி யீந்த
சொல்லாருந்துறவுநிலை விளக்கநூல் பாநுவைப்போற் றுலங்கிவாழ்க.

---

கோயிலூர் - பரம்பரை ஸ்ரீமத், மதுரை

அறிவாநந்த சுவாமியவர்களியற்றிய

நேரிசை வெண்பா.

சாந்தத் தவமுனியாஞ் சாமிகுப்பு சாமிகுரு
வேந்தனையாக் கண்ணருளா மென்பிரசம்—மாந்தித்
துறவு நிலைவிளக்கஞ் சொற்று னதன்சீர்
திறவறிஞ ரேகாண்பார் தேர்ந்து.

---

ஸ்ரீ திருவருட்பிரகாச வள்ளலார் மரபு

காஞ்சீபுரம், ஸ்ரீமத், நிச்சல - இராமாநந்த சுவாமிகளின் பாதசேகரர்

ஸ்ரீமத், கா. நிச்சல - சொரூபாநந்தமணி யவர்களியற்றிய

நேரிசை வெண்பா.

மறையமுத மீயு மனச்சாந்தி நல்குந்
துறவு நிலைவிளக்கத் தூய்நூல்—நிறைபெருமைச்
சாமிகுப்புச் சாமியெனுந் தன்மயஞ்சேர் சின்மயனிப்
பூமியுளார்க் கீந்தான் புரிந்து.

---

திருத்துருத்தி-இந்திரபீடம்-ஸ்ரீ கரபாத்திர சுவாமிகளாதீனம்
ஸ்ரீ ஈசூர் - சச்சிதாநந்த சுவாமிகளின் பாதசேகரர் திருவொற்றியூர்

### ஸ்ரீமத், பி. ஆறுமுக முதலியாரவர்களியற்றிய

எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

அறத்தினிற் பெரிது துறவற மென்றே
யந்தநூல் பலவுங்கற் றுணர்ந்தே
துறத்தலுண் ணாட்டத் துணையென மதித்துத்
துறவுநூ லொன்றியற் றினனால்
அறந்தனக் கில்ல மலதிலை யென்றே
யறமுப்பா னிரண்டையு முனாற்றும்
திறத்தினன் சாமி யாங்குப்பு சாமி
சிறந்தநன் னாவலன் றானே.

---

சென்னை - கோமளேச்சுரன்பேட்டை ஸ்ரீமத், ஆசிரியர்

### கோ. வடிவேலு செட்டியாரவர்களியற்றிய

நேரிசை வெண்பா.

சாமி நிலையறிந்து சாமியா யேநின்ற
சாமிகுப்பு சாமியெனுஞ் சாந்தமுளான்—கோமியாள்
நல்லருளாற் பன்னூ னலமாக வாராய்ந்து
பல்லாரு மேத்தப் பரிந்து.

துறவு நிலைவிளக்கந் தூய்தாம்வெண் பாவால்
அறவர் புகழ வழகாய்த்—திறமாகப்
பாடி யளித்திட்டான் பார்ப்பார் சுகமுறுவார்
நாடியவெல் லாங்கூட நன்கு.

---

சென்னை - இராஜதானி கலாசாலைத் தமிழாசிரியரும்
"நல்லாசிரியன்" பத்திராதிபருமாகிய

### ஸ்ரீமத், கா. நமச்சிவாய முதலியாரவர்களியற்றிய

நேரிசை வெண்பா.

அறத்தாற்றி னீத்தா ரகநிலையு நில்லார்
புறத்தாற்றிற் செல்லும் புலனுந்—திறத்தாற்றின்
வெண்பாவி னாலே விளம்பினான் யாவர்க்குங்
கண்பாயக் கட்டுரையாற் காண்.

கற்றோர்க்குக் கண்ணாய்க் கலைகள்பல கற்றுணர்ந்தான்
பெற்றோர்போல் யாவரையும் பேணுவான்—முற்றத்
துறவறமே பூணுஞ் சுவாமிகுப்பு சாமி
அறவாணற் கன்பனா வான்.

---

சென்னை - கீழ்ப்பாக்கம் - டீ. எஸ். எம். கால்ஸ் ஹைஸ்கூல்
தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமத்,

## கொ. இராமலிங்கத் தம்பிரானவர்களியற்றிய

### பதினாறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

திரைகடற் புடவி யுயிர்பா மென்னத்
திகழ்தரு முப்பொரு ளுணர்ந்து
செப்பரு முவகை யடைவதற் குரிய
செய்யமெய்த் துறவற நெறியைத்
தரைதனிற் கற்றோர் மற்றவர் நாளுந்
தண்கட லமுதெனப் போற்றத்
தகவுறுந் துறவு நிலைவிளக் கமெனத்
தக்கநன் னுமமும் புனைந்து
புரையிலா தொருநூல் பொருவறச் செய்த
போற்றுமா ரியனெவ னென்னிற்
புலவர்க டம்மைப் புரப்பவன் ஞானப்
புனிதநூ லுணர்ந்தநற் றவர்கள்
விரைமலர்க் கமல பதநனி பரவும்
வியத்தகு நுண்ணறி வுடையோன்
மேன்மைசேர் சாமி குப்புசா மியெனும்
விளம்பருஞ் சீர்த்தியன் மாதோ.

---

திருமயிலைச் செந்தோம் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர்

## ஸ்ரீமத், ம. செல்வநாத முதலியாரவர்களியற்றிய

### எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

உலகமெலா நன்னெறியின் பான்மை யாவு
முணர்ந்துபர முத்தியடைந் துய்வ தற்கே
பலவறிஞர் பலதுறையா யமைத்த பன்னூல்
பகர்ந்ததுற வறமுறையி னிலைமை காண
நிலவுறுமந் நூலனைத்துங் குரவர் தம்பா
னேயமலி பத்தியொடு வழிபா டாற்றிப்
பலனுறவே யுணர்ந்தபொரு ளனைத்து மொன்றாய்ப்
பரிவுடனே பலருமெளி தாகக் கொள்வான்.

தோன்றுபெருங் கருணையது பன்னு ளுந்தத்
துறவுநிலை விளக்கமெனு மினிய நன்னூல்
ஆன்றவர்கள் கண்டுநெறி யிறும்பூ தெய்தி
யகமகிழ வியற்றியச்சு வாக னத்தில்
மான்றமற நிசியுளைந்து துள்ளி யோட
வயங்குறுசெஞ் சுடரெனவே யுலவச் செய்தான்
சான்றவர்க ணேயமிகு சாமி குப்புச்
சாமியெனு மபிதான வள்ள லம்மா.

---

ஸ்ரீமத், க. அரங்கநாதம் பிள்ளையவர்களியற்றிய

நேரிசை வெண்பா.

சன்யாசஞ் சேட்டமெனச் சான்றோ ருரைத்துவக்கும்
பொன்னனைய வார்த்தைதனைப் போற்றியே—பின்சொல்லால்
தறுவுறு ஞானசுக சாமிகுப்பு சாமிசொற்றான்
துறவு நிலைவிளக்கஞ் சூழ்ந்து.

---

சைவ சித்தாந்த மகா சமாஜ போஷகரிலொருவராகிய

பண்டிதரத்தினம்,

குகஸ்ரீ, புழலை - திருநாவுக்கரசு முதலியாரவர்கள்

(மிராசுதார் - செம்பியம்.)

இயற்றிய

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

திருத்தகுசீர் "பெறுமவற்று" ளெனுமரிய
சொற்றொடர்பின் றிருக்குறட்குப்
பொருத்தமுறுஞ் சற்குணனற் றேனைவரு
முயர்செல்வன் புகழ்மிக் கார்ந்த
குருத்துவமுற் றொளிர்மகிபன் றுறவுநிலை
விளக்கமதின் கொள்கை யாவுங்
கருத்துறவே மிகநயமாய்ச் சாமிகுப்புச்
சாமிநன்கு கழறி னனால்.

---

வித்துவான் - சென்னை - வண்ணையம்பதி ஸ்ரீமத்,

## வ. சே. சேஷாசல கிராமணியாரவர்களியற்றிய

### நிலைமண்டில வாசிரியப்பா.

உலகெலா முய்ய வுத்தமத் துறவின்
நலமிகு தன்மையு நாட்டிற் கின்னலாம்
போலித் துறவின் புன்மைத் திறமையும்
கோலி யாத்துக் குணத்திருத் தருத்தி
இந்திர பீடத் தெழிற்கர பாத்திர
அந்தவா தீன வையாக் கண்ணுத்
தேசிகர் சீடன் றெளிவு மிக்கோன்
மாசிலா நண்பன் மாட்சிமை யுடையோன்
கோதிலாச் சாமி குப்புச் சாமி
நீதியாய்த் துறவு நிலைவிளக் கமென
அரியநூ லொன்றை யன்புடன் றந்தனன்
தெரிவுடை யோர்க டெளிவது கடனே.

---

வித்துவான், சென்னை - இராயபுரம்

## ஸ்ரீமத், சிந்நய நாயகாவர்களியற்றிய

### நேரிசை வெண்பா.

பூமிதனி லெஞ்ஞான்றும் பொன்று திருந்திலகச்
சாமிகுப்பு சாமியெனுஞ் சாந்தமுளான்—தோமிற்
றுறவு நிலைவிளக்கந் தூய்தாகச் செய்தா
னறவோர் மிகமகிழ வாய்ந்து.

---

தேசபந்து பத்திராதிபர் - சதாவதானம்-ஸ்ரீமத்,

## தெ. கிருஷ்ணசாமிப் பாவலரவர்களியற்றிய

### நேரிசை வெண்பா.

பொய்த்துறவு மெய்த்துறவும் போக்கறிவா ருள்ளத்தே
உய்த்துணர வைத்த வுணர்வென்னே—கைத்தலத்து
நெல்லிக் கனிபோல நெஞ்சத்தே தான்பதியச்
சொல்லும் திறத்தினையோ து.

தொல்லை யறவே துறவு நிலைவிளக்கம்
சொல்லிப் புவிக்கே சுகமளித்தான்—நல்லறிஞன்
சாமிகுப்பு சாமி தனக்கேது கைம்மாறு
பூமியது செய்யப் புகும்.

---

## ஸ்ரீமத், தெ. பொ. மீநாட்சி சுந்தரனார் B. A. B. L.

ஹைகோர்ட்டு அட்வகேட்

சென்னை - முனிசிபல் கௌன்சில ரவர்களியற்றிய

### நேரிசை வெண்பா.

துறவு நிலைநின்றே தூயநிலை சார்ந்து
துறவு நிலைவிளக்கஞ் சொன்னார்—உறவுநிலை
சம்புவடி வாய்மிளிருஞ் சாமிகுப்புச் சாமியெனும்
பம்புபுகழ் சாமியவர் பார்.

---

சென்னை, பச்சையப்பன்

உயர்தரப்பாடசாலைத் தலைமைத்தமிழ்ப் பண்டிதர் ஸ்ரீமத்,

## கா. ர. கோவிந்தராஜ முதலியாரவர்களியற்றிய

### நேரிசை வெண்பா.

துறவு நிலைவிளக்கந் தூய்மையுறு நூலி
னுறவு நிலைமுறையை யோர்ந்திங்—குறுமுறையே
ஆமிக்குப் போனு மருந்தமிழாற் கட்டுரைத்தான்
சாமிகுப் புச்சாமி சார்ந்து.

---

மதறாஸ்-கீழ்ப்பாக்கம்-சிவில் ஆர்பன் அசைலம் தமிழ் முனிஷி ஸ்ரீமத்,

## தி. கூரத்தாழ்வார் முதலியாரவர்களியற்றிய

### அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

ஆரியனார் சொற்றவண மழிபொறிபு லன்களடர்த் தறிவா நந்த
வாரியதிற் றிளைத்தமருஞ் சாமிகுப்பு சாமியெனு மதிவல் லாளன்
பாரியனு நற்றுறவர் தீத்துறவர் பரிசினைவெண் பாவில் யாத்துச்
சீரியனுந் துறவுநிலை விளக்கமென நல்கினன்பார் தெளிய மாதோ.

---

ஆசிரியர் ஸ்ரீமத், கோ. வடிவேலு செட்டியார் அவர்கள் மாணவர்

## ஸ்ரீமத், ச. கந்தசாமி முதலியாரவர்களியற்றிய

### நேரிசை வெண்பா.

துறவின்றி யுய்ந்தாரார் தூநீர்ஞா லத்தில்
துறவன்றி யொன்று சுகமோ—துறவின்றிக்
கண்டபடி பேசுங் கயவ ரறிவாரோ
உண்டபொழு துண்டா முவப்பு.

உவப்புடனே யெம்மனோர்க் குண்மைத் துறவைத்
தவப்பெரியார் தாம்விளக்கிற் றள்ளா—துவப்புடனே
கொள்வதலா தன்னவர்க்குக் கூறு முபசாரம்
பிள்ளைமதி யென்றென்றே பேசு.

பேசும் புகழ்சாமி குப்புசா மிப்பெரியோன்
மாசொன் றிலாத மனத்துடனே—நேசத்
துறவு நிலைவிளக்கந் தூயமனத் தோர்க்கு
நறவினினி தாநவின்று னன்கு.

---

வித்துவான் - வல்லநகர் ஸ்ரீமத்,

## வைத்தியலிங்கம் பிள்ளையவர்களியற்றிய

நேரிசை வெண்பா.

தள்ளரிய ஞானபரன் சாமிகுப்பு சாமியெனும்
வள்ளற் பெருமான் வனைந்தளித்த—தெள்ளுந்
துறவு நிலைவிளக்கத் தோணிகடத் துங்காண்
பிறவிக் கடலின் பெருக்கு.

---

ஆசிரியர் ஸ்ரீமத், கோ. வடிவேலு செட்டியாரவர்கள்
மாணவருளொருவரும்,
வேலூர் ஊரிஸ்கல்லூரி தமிழாசிரியருமாகிய ஸ்ரீமத்

## கீ. வேணுகோபால நாயகரவர்களியற்றிய

அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அன்பர்பணி செய்தலற மெனக்கண்டு தொண்டர்களுக் கன்ன தான
மின்புறவே செய்கின்ற சாமிகுப்பு சாமியென்பா னியற்றித் தந்தான்
மன்பெறுநூல் பலவாய்ந்து துறவுநிலை விளக்கநூல் மதிமிக் கார்ந்த
நன்புலவோர் வியந்தேற்க நற்றுறவோர் போற்றிசெய நன்று மாதோ.

---

சென்னை - பச்சையப்பன் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமத்,

## ஆ. வி. கன்னைய நாயுடவர்களியற்றிய

நேரிசை வெண்பா.

எண்குணத்தான் றாளிணையை யெஞ்ஞான்று மேதுதிக்குந்
தண்குணமார் சாமிகுப்பு சாமிவள்ளல்—மண்மேல்
துறவு நிலைவிளக்க மென்னுமோர் தூய
நிறைஞான நூறந்தா னோர்ந்து.

---

மருங்காபுரி - சமஸ்தான வித்துவான்
ஸ்ரீமத், ஏகை - சிவசண்முகம் பிள்ளையவர்கள் குமாரரும்
ஸ்ரீமத், கோ. இராமலிங்கத் தம்பிரானவர்கள் மாணவருமான
ஸ்ரீமத், ஏகை - சிவராஜம் பிள்ளை அவர்களியற்றிய
அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

கலைவிளக்குஞ் ஞானமுதிர் பன்னூலின் கடல்கடந்தோன் கருதுந் தூய, உலைவிளக்குந் தழல்வண்ண மேனியனார்க் கன்புசெயு முயர்வொப் பில்லா, நிலைவிளக்குந் தயாவிருத்தி சாமிகுப்பு சாமியெனு நிருப னின்றே, விலைவிளக்கு மதிப்புமிக்க துறவுநிலை விளக்கமெனும் வியப்பார் நூலே.

பொருள்விரிக்கும் புலவர்மனங் களிதுளும்பும் புதுவிருந்தோ புகழில்லாத, இருள்விரிக்கும் பொய்வேடத் துறவியர்க்கு நெறிகாட்டு மெல்லை யீதோ, அருள்விரிக்கும் மாதவத்தோர் செயல்காட்டும் மெய்விளக்கோ வருமை யாகத், தெருள்விரிக்கு மிந்நூற்கிங் கெந்நூலு மிணையாமோ தெரிந்தி டீரே.

---

சென்னை - பழைய வண்ணாரப்பேட்டை
சமரசஞானானந்த சபைத் தலைவரும், தணிகைப் புராண வசனம்
விகடஞான கோர்ட் பிரதாபமாலை முதலிய நூற்களினாசிரியரும்,
கணேசபாரதி அச்சுக்கூடச் சொந்தக்காரருமாகிய, வித்துவான்
ஸ்ரீமத், முருகேச நாயகரவர்களியற்றிய
கலிவெண்பா.

வாழிகல் லாலிருந்த மௌன குருமணியே
வாழி யெனவைத்த வான்கருணை—சூழிந்நாள்
"ஏதேது செய்தாலு மெவ்விடத்துச் சென்றாலுங்
காதேது கேட்டாலுங் கண்ணெதிரே—ஏதேதும்
வந்தாலும் வாலறிவா மாறுது நில்"லென்றும்
"உன்னேல் குறிவைத்திங் கோரிடமு"—மென்றும்
உடம்பற்றுத் தீய வுளமற்று மிக்க
வடவூற்ற வாங்கார மற்று—படபடெனப்
பேசுவது மற்றுப்பல் பேதநெறி யற்றி"ரென்றும்
"மேதினியும் யாமென்று" மேவென்று—மீதும்
"ஒருமை நிலைபிரியா" தோங்க "வுடம்போ
டிருந்துமு டம்பைக்கா ணேன்"று—மரை நீ
ரொப்பச் சகத்தி னுறு"வென்றுஞ் சுட்டிறந்த
மெய்த்துறவு சூ"ழென்று மென்மேலுஞ்—செப்பியெழி

லானந்த வெள்ள மலையா னிழுத்தி ழூத்துத்
தானபே தந்ததும்பித் தங்குவபோ—லான
துறவு நிலைவிளக்கந் தொன்னூ லருளி
நிறைந்த பெருங்கருணை நிற்ப—சிறந்த
குருந்தடியி னின்ற குருமணியோ கல்லா
லிருந்த பெருமானோ யாரோ—திருப்புகழ்க்கா
அன்றருணைக் கோபுரத்தி னன்பிருந்த யோகியோ
சென்றமெய் கண்ட சிவமேயோ—இன்றிங்கே
சாமிகுப்புச் சாமியெனச் சார்ந்தோர் மனிதர்போல்
ஆமுதவி செய்த வடிகட்குப்—பூமிசையேன்
என்னேகைம் மாறிங் கியற்றுவே னப்பெருமான்
பொன்னடிக்கென் சென்னிப் பொருத்தன்றி—என்நாளும்
வாழி யவர்கருணை வாழி யவர்மரபு
வாழி யவர்செய் வளம்.

---

"சத்ததாமாலை" "வியாசமாலிகை" புஸ்தகாசிரியர், சிவகாசி

## ஸ்ரீமத், ச. சு. சங்காலிங்கக் கவிராய ரவர்களியற்றிய

### பன்னிரண்டுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

ஜென்மப்ர யோஜனந் தருஞான தீபமாந்
 தித்திக்கு மதுரவமுதாந்
தெய்வீக பீடமாம் வேதாந்த கூடமாஞ்
 ஜெகசுகோ தயபாநுவாம்
சன்மார்க்க பொக்கிஷந் தருமக் களஞ்சியஞ்
 சாதுக்க ணடனசங்கஞ்
சரியைகிரி யர்யோக ஞானனு பூதிச்
 சனனந்த தமிழ்வாரிதி
இன்பப்ர காசவிந் திராபீட கரபாத்ர
 ரிலங்குமா தீனமரபி
னெழிலுற்ற கலைகற்றுத் திசைமுற்றும் புகழ்பெற்
 றெவர்க்குநற் சுகமளிக்கும்
அன்பிற்க்கு பாகாச் சாமிகுப் புச்சாமி
 யருள்சாரந் தெழுதி யீந்த
அருமைபெறு துறவுநிலை விளக்கவபி தானமுற்
 றதிசய முலரவுநூலே.

---

இலக்கணம் - அ. சா. ஜெகராவ் முதலியாரவர்கள்

மாணவரில் ஒருவராகிய ஸ்ரீமத்,

### வி மு. இராமசாமிப் பிள்ளையவர்களியற்றிய

நேரிசை வெண்பா.

சாடு மண்மழித்த சாமிகுப்பு சாமிசொற்ற
நேடுந் துறவு நிலைவிளக்கம்—நீடும்
துலைபோலப் பொய்த்துறவு தூமெய்த் துறவின்
நிலைபோதக் காட்டு நிறுத்து.

---

திருத்துருத்தி - இந்திரபீடம்

ஸ்ரீ ஈசூர் - சச்சிதாநந்த சுவாமிகளின் மாணவரும்,

மூனுகுபட்டு மடாலயம் சதாநந்த சபை சங்க மூர்த்தியுமாகிய

ஸ்ரீமத், நீலமேக சுவாமி யவர்களின் பாதசேகரர்

### ஸ்ரீமத், அருளாநந்த சுவாமி யவர்களியற்றிய

எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

சீரோங்குஞ் செயலுடையான் சிறப்புநிறை பொருளுடையான்
செய்யவறச் செயல்களெலாஞ் செய்யவல்லான்
நேரோங்கும் பிரபலமாஞ் சுருதியுள மனைத்தினையு
நேயாக முவகைகொள நிகழ்த்தவல்லான்
நாரோங்குஞ் சுகநிலையி னழுவாமற் செயலெல்லா
நயமாகச் செய்தீரன் றாயஞானத்
தாரோங்குந் திருமார்பன் கருணைநிறை பூரணனுஞ்
சாமிகுப்பு சாமியருட் சாமிதானே.

எல்லோரு மின்பநிலை யெய்துதற்கே சங்கர
ரிங்கமைத்த நாற்பீடத் தேற்றமுற்ற
நல்லோர்க டிதியிந்த்ர பீடம்வளர்ந் தோங்கிடவே
நண்ணுசச்சி தாநந்த னருளடைந்த
சொல்லோங்கை யாக்கண்ணு தேசிகன்றாண் மலரெய்திச்
சுவாநுபவ நிலைநிற்குஞ் சுத்தமுத்தன்
சல்லாபக் கொல்லாமை தரணிமுற்றும் பரவவிழை
சாமிகுப்பு சாமியருட் சாமிதானே.

பெரியவிர ணியமலையைச் சிறியவனு துளைத்ததனுட்
பெய்தமைத்தாற் போல்வேதச் சென்னிமன்னும்
அரியனவாம் பொருள்களமைத் தினிதாம்வெண் பாவதனு
லாக்கியணி துறவுநிலை விளக்கமென்ன
உரியவழி தானம்புனைந் துலகமுய்ய வளித்திட்டா
ஞேதியந்த நூலினுறு பொருளையெல்லாந்
தெரியவறிந் தந்நெறியி னிற்கிலென்பு மயிர்க்கால்கள்
தேகமெங்குந் தித்திக்குந் தேறுவீரே.

மனங்கோணிற் றப்பாது வன்பொறிகள் கோணுங்கனம்
வழுவுமந்தக் கரணங்கள் கோணுமென்றும்
மனவரவைச் சங்கரனுர் வண்பூணுப் பூண்டதுபோன்
மாஞானி களுமந்த வன்மனத்தைக்
கனவறிவாந் தண்டதனு னேந்திடவே புடைத்துக்
கதித்தவணி யாகப்பூண் டார்களென்றும்
அனந்தவா ளாற்பணிக ளகிலத்தார் பார்ப்பதுபோ
லாளாக மனத்தைத்தா மாக்கியென்றும்.

சகம்பொருளாக் கண்டுகவார் சாந்தநெஞ்ச ராவரென்றுஞ்
சாயையெனக் காண்பர்சக முழுதுமென்று
மிகழுமுடம் போடிருந்து முடம்பதனைக் காணும
லெழிலறிவா நிற்கின்ற தீரரென்று
மகண்டமதா மறிவொன்றே யழியாத பொருளென்று
மகண்டவறி விற்கிலையொப் பாயினென்று
மகமுருக வுரைத்திட்ட மந்தணமா வாக்கியத்தி
னருமையர வரசாலு மறையொணுதே.

---

அகஸ்திய மகாரிஷி மரபு

ஸ்ரீ சாது நாராயண தேசிகரவர்களின் மாணவரி லொருவராகிய

## ஸ்ரீமத், ஞானந்த மணவாள சுவாமியவர்களியற்றிய

### எழுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

சீரிலகு மிந்திரபீ டத்துவந்தோன் சின்மயனே யாக்கண்ணு தேசி கேசன், பேரிலகு பொற்பாதம் விளக்கவேதான் பெட்புடனே நீதி நூல் பலவுஞ் செய்தோன், பாரிலகு மாந்தரெலா முண்மைதேறிப் பாசமிலார் தன்னடியைச் சார்ந்து வாழ, நேரிலகு துறவுநிலை விளக்க மென்னூல் நிகழ்த்தினுன் சாமிகுப்பு சாமி மாதோ.

---

புதுவை - ஆநந்தாஸ்ரம சாதுமகா சங்கத்தின் உபநாயகர்

## ஸ்ரீமத், ஜெகந்நாத நாயுடவர்களியற்றிய

### நேரிசை வெண்பா.

மறையமுத மீயு மனச்சாந்தி நல்குந்
துறவு நிலைவிளக்கந் தூய்—நிறைபெருமை
சாமிகுப்பு சாமியெனுந் தன்மயஞ்சேர் சின்மயனிப்
பூமியுளோர்க் கீந்தான் புகழ்ந்து.

---

இந்திரபீடம் - கரபாத்திர சுவாமிக ளாதீனம்

ஸ்ரீமத், பி. ஆறுமுக முதலியாரவர்கள் மாணவர்களுள் ஒருவராகிய

## ஸ்ரீமத், ர. சுப்பிரமணி ஆசாரி அவர்களியற்றிய

### நேரிசை வெண்பா.

துறவின் பயனைத் துருவி யறியத்
துறவு நிலைவிளக்கஞ் சொல்வான்—திறநிலையாம்
சச்சிதா னந்தமதைச் சந்ததமும் பாருணர
எச்சமிலா தோதினு னிங்கு.

---

### எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

சீரோங்கு மிந்திரபீ டத்த மர்ந்த
சிறந்தகுரு சச்சிதா னந்தன்பால் வந்த
பேரோங்கு மையாக்கண் ணுகுநற் குரவற்
பின்னுெ யவனருளாற் கல்வி தேர்ந்து
பாரோங்கு மில்லறத்து வழிபா டெய்திப்
பலவறங்க ளாதுலர்க்குப் பண்பாச் செய்வான்
ஏரோங்கு வளமலிசண் முகஞான புரத்தி
லினிதுறையுஞ் சாமிகுப்பு சாமி தானே.

---

வித்துவான் - சென்னை - வண்ணையம்பதி ஸ்ரீமத்;

## சண்முகவேலு முதலியா ரவர்களியற்றிய

### நேரிசை வெண்பா.

கற்றவர்கள் யாருங் களிக்கத் துறவுநிலை
யுற்ற விளக்க மெனுமொருநூல்—நற்றிறமாச்
சொற்றான் சிறக்கச் சுவாமிகுப்புச் சாமியென்பான்
பெற்றான் பெறற்கரிய பேறு.

---

மதராஸ் பியர் ஆபீஸ் டிராபிக் ஓவர்சீயராயிருந்த
மதுரைத் தமிழ்ச் சங்கத்து வித்துவான்
மோசூர் - முனிசாமி முதலியாரவர்கள் குமாரரும்
சென்னைச் சிவனடியார் தலயாத்திரைச் சங்கத்தின் தலைவரும்
சித்த வைத்திய தமிழ்ப்பண்டிதருமாகிய ஸ்ரீமத்,

## மோசூர் - சண்முக முதலியாரவர்களியற்றிய

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

பொய்வேடம் பூண்டுலகிற் றுறவியென வுலவிவரும் புன்மை யோர்தம், கையாடுங் கைதவத்தை விரித்துமுண்மைத் துறவோர்கள் கவினுஞ் செய்கை, மெய்யாக வேவிளக்கி யுந்துறவு விளக்கமென விளம்பி னானல், ஐயாக்கண் ணடிமுடிகொள் சாமிகுப்புச் சாமியெனு மறிஞ ரேறே.

---

திருக்குறள் சொற்குறிப் பகராதியாசிரியர்
ஸ்ரீமத், வா. மார்க்கசகாய செட்டியார் குமாரர் ஸ்ரீமத்,

## வா. முத்துக்குமாரசுவாமி செட்டியா ரவர்களியற்றிய

நேரிசை யாசிரியப்பா.

பொன்னார் கமலப் புத்தேள் வகுத்த
மன்பே ருலகின் மானிட ரெவரு
மன்போ டுற்ற வறநெறி சென்றே
யடக்கம் வாய்மை யருளும் பேணிக்
கடக்கரும் பிறவிக் கருங்கட னீந்தத்
துணையாந் தோணி துறவே யாதலி
னன்னதன் சிறப்பை யனைவரு முணரப்
பன்னருஞ் சீர்த்திப் பண்புறு குரவன்
ஐயாக் கண்ணெனு மமலன் றிருத்தாள்
கையாற் றெழுதுங் கருத்தொடு வழுத்தியு
மவனருண் மெய்ம்மொழி யகத்துட் கொண்டும்
பவமறு நிலையைப் பாங்கா வடைந்த
செல்லுறழ் தடக்கையான் செந்தமி ழறிஞ
னெல்லையி னூல்க ளெளிதி னியற்றுங்
குணஞ்சால் சாமிக் குப்பு சாமி
நில்லார் துறவு நிலைவிளக் கமெனுங்
கலையொன் றளித்தான் கற்றவர் விரும்பி
யோர்மிகு மற்றத னியல்பைப்
பார்மிசை யோங்கப் பரப்புவர் தாமே.

---

ஆங்கிலோ இந்திய வைத்தியர் ஸ்ரீமத்,

## அ. பெரியசாமி முதலியாரவர்களியற்றிய

நேரிசை வெண்பா

துறவர் புகழ்ந்து துணிவாக வேற்கத்
துறவு நிலைவிளக்கஞ் சொற்றான்—திறஞான
சாமிகுப்பு சாமியென்பான் சார்ந்தவரை யுய்விப்பான்
காமியமி லாநெறியான் கண்டு.

---

சைவப்பிரசாரகர்

## ஸ்ரீமத், சை. மு. கண்ணப்ப செட்டியாரவர்களியற்றிய

நிலைமண்டில வாசிரியப்பா.

பூமலி சோலை பொற்பு மிக்க
தேமலி பொய்கைத் தேனும் பேட்டைச்
சாமி குப்புச் சாமியாம் பெரியார்
காமிய மகன்ற கண்ணிய ருறவன்
மெய்ப்பொருள் கருது மேலோன் சீலன்
பொய்ப்பொருள் கருதாப் புலமை யாளன்
நல்லற நடாத்தி நாளும் வாழுந்
தொல்லை மறைநெறித் துன்னுஞ் சீரோன்
வியன்றரு துறவு நிலைவிளக் கந்தனை
நயன்றரு பொருளாய் நறுஞ்சுவை நறவம்
எத்துறை யோரு மெளிதா றுகர
ஒத்துவந் தளித்தா னுவகை யாயே.

---

பிரசங்க சூளாமணி ஸ்ரீமத், க. வ. திருவேங்கடசாமி நாயடவர்கள்
மாணுக்கர்களிலொருவராகிய ஸ்ரீமத்,

## திருத்தணிகை - சண்முக முதலியாரவர்களியற்றிய

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

இல்லறஞா னச்சாமி குப்புசா மிப்பெயர்கொ ளெந்த மண்ணல்
அல்லமரு மணிகண்ட னடியடையுங் கருத்துமிகு மன்பர் நாளும்
எல்லமருந் துறவுநெறி யையமின்றிக் கண்டுகளித் தின்ப மேவ
நல்லறமாந் துறவுநிலை விளக்கமெனு நூலளித்தா னயந்து மாதோ.

---

ஸ்ரீ அகத்திய மரபு - பண்டிதஸ்ரீ
பூ. அ. கோவிந்தராஜ தாசரவர்களின் பிரதம மாணவர்
ஸ்ரீமத், தி. முனிசாமி நாயகரவர்களியற்றிய
கட்டளைக் கலித்துறை.

தேவர் குறளுந் திருகுதா ரண்யமுஞ் செப்புமுயர்
மேவரு மெய்த்துற வன்றி யுடைநடை வேடமெலாம்
ஆவது பொய்த்துற வென்றிவ் வுலக மறிவுறமெய்த்
தாவந் துறவு நிலைவிளக் கந்தகச் சாற்றினனே.

சாற்றுங் கரபாத்ர மாமர போங்கத் தனுவெடுத்துத்
தோற்றுமை யாக்கண்ணு சற்குரு வின்று டொழுது தினம்
போற்றுங் கொடைக்கன்னன் சாமிகுப் புச்சாமி பூவுலகில்
ஆற்றும்பே ரன்புடை நன்றியின் மாற்ற மளவிலவே.

---

புராணிகர்
ஸ்ரீமான், கு. குமாரசுவாமி முதலியாரவர்களியற்றிய
எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

பன்னிரு பாகு பாட்டின தாகப் பகரரு நூல்களைத் தந்து
நன்னலம் பெருகச் செய்தனன் முன்னர் நற்றவ வாய்மையிற் சிறந்து
தன்னலங் கருதாச் சாமிநற் குப்பு சாமிசற் குருவென விளங்கும்
பன்னருந் துறவு நிலைவிளக் கத்தைப் பாரினுக் குதவின னம்மா.

---

தண்டல்கழனி கிராம முனிசீபு ஸ்ரீமான்
புழலை - மாணிக்கவேலு முதலியாரவர்களியற்றிய
கட்டளைக் கலித்துறை.

நறவுமிழ் சோலை தவழ்தருந் தேனை நகர்வருநல்
லறநெறி சாமிகுப் புச்சாமி யண்ண லவனி புகழ்
துறவு நிலைவிளக் கந்தனைச் சொற்றுன் சுவையொழுகத்
துறவ ரினியந் நெறிதனைப் பற்றிச் சுகமுறவே.

---

செம்பியம் S. P. G. மிஷன் ஸ்கூல் ஸ்ரீமான்,

ச. இ. தங்கவேலு உபாத்தியாயரவர்களியற்றிய

நிலைமண்டில வாசிரியப்பா.

மன்னிய செல்வ மாண்புறுங் கல்வி
துன்னிய வமைதி தூயநல் லொழுக்கம்
சிவபரஞ் சுடரின் றிருவடிக் கன்பு
நவமுக மேத்த நற்குணச் செய்கை
தாமினி தோங்குஞ் சாமி குப்புச்
சாமியென் றுயர்வாச் சாற்றுதற் கேற்க
நீதியாய்த் தமிழ்மொழி நிருவகித் திடுவோன்
பூதிசா தனத்தைப் பொலிவுற வணியும்
சுந்தர மிக்க தொன்மை சான்ற
முந்தை மறையின் மொழியறி யாத
போலித் துறவு பூண்டவர்க் கெளிதாய்
நூலின் வழியாய் நுண்பொரு ளடக்கித்
துளக்க முற்றுயர் துறவு நிலையின்
விளக்க நன்னூல் விளம்பின னன்கு
புலவர்க்கு வெண்பாப் புலியெனு மாற்று
உலகி லறவே யொழித்திடற் குன்னி
ஆயிர மாயிர மாகவெண் பாவால்
தாயினு மிக்க தயவொடு மேலாம்
பன்னூ லாய்ந்த பயிற்சியின் பலனெனப்
பன்னிரு விளக்கம் பரிவுடன் முன்னர்
தந்தெமை யாண்ட தலைமக னிவனே
செந்திரு வாணி சேரா ரொருங்கே
ஒருவ ரிடத்தெனு முண்மை நீங்கப்
பெருமிதங் கொளவே பிறங்குமெம் பீரன்
வருட முப்பது வாழ்ந்தவ ரிலையெனும்
மருடரு வழக்கை மறுத்தற் கிடஞ்செய்
அறுபா னண்டிற் கதிகமாய்ப் பெருவாழ்
வுறுமா றிங்கண் ணுற்றதின் றன்மை
சாலவும் வியக்கத் தக்க தெனவே
நூலறி வாளர் நுவல்வ ரென்றால்
சிற்றறி வுடையேன் சிறப்பித் துரைக்கக்
கற்றறி விலாத கையிறை யாமே.

சென்னை - சூளை - பட்டாளம் - அறப்பிரசாரக சபை,
திருக்கழுக்குன்றம் - வேதகிரீச்சுரர் அன்னதான சங்கம்
ஆகிய இவ்விரண்டு சபைகளின் அதிபர் ஸ்ரீமத்,

## செங்கை. த. தங்கவேலு முதலியாரவர்களியற்றிய

### எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

சென்னைநகர்ப் புரசைதனிற் சிறக்குஞ் சாமி
செங்கமலை வெண்கமலை சேர்ந்த சாமி
நன்னயஞ்சேர் நூற்பலவு நவின்ற சாமி
நாடோறு மனதான நடத்துஞ் சாமி
தன்னிகரி லாச்சாமி குப்புச் சாமி
தவவையாக் கண்ணுகுரு தானுஞ் சாமி
தன்னருளாற் றருதுறவு நிலைவி ளக்கந்
தருதுறவர்க் குயிர்த்துணையாய்த் தங்கிற் றம்மா.

---

சைவசித்தாந்தப் பிரசங்காமிர்தம், ஸ்ரீமத், பெ. கந்தசாமிப்
பிள்ளையவர்களின் குமாரர் - புராணிகர் - வித்தியாபாநு

## ஸ்ரீமத், பெ. க. சண்முகம் பிள்ளையவர்களியற்றிய

### நேரிசை வெண்பா.

அறவோ ரநுட்டிக்கு மாய்நெறியைக் காட்டுந்
துறவு நிலைவிளக்கஞ் சொற்றான்—அறநெறிதேர்
சாமிகுப்பு சாமிசை தன்ய நிலையாய
தேமிகுத்துச் சொட்டத் தெளிந்து.

---

தமிழ்ப்பண்டிதர் - ஸ்ரீமத்,

## வ. ப. தே. இரத்தின சபாபதி முதலியாரவர்களியற்றிய

### அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

வைப்பனைய சாமிகுப்பு சாமியெனு ஞானநிலை வள்ளன் மேனாள்
செப்பரிய போதவிளக் கம்முதலா நூலளித்த திறன்போ லின்றும்
ஒப்பரியதுறவுநிலை விளக்கமெனுந் தெருணூலொன் றுவந்துதந்தான்
அப்பெரிய நூனெறியில் வதிந்திடுவோ ரழியாவின் படைவர் மாதோ.

---

தென்னாட்டுச் சைவ சித்தாந்த மகா சமாஜத்தின்
நிருவாக அங்கத்தவருள் ஒருவரும், சித்தாந்தப் பிரகாச சபையின்
உதவி சபைத்தலைவரும், சைவ சித்தாந்த மகா சமாஜத்தினின்று
வெளிவரும் "சித்தாந்தம்" என்னும் பத்திரிகையின்
உதவிப் பத்திராசிரியரும் ஆகிய வித்துவான், பாரிப்பாக்கம்,

## ஸ்ரீமத், கண்ணப்ப முதலியாரவர்களியற்றிய

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

தண்ணளி சுரந்து சாந்தம் தழைந்தொளிர் நிலைக்கண் ணின்றே
யண்ணலா ரருளிற் றோய்ந்தங் கறப்பெரும் போகந் துய்க்கும்
புண்ணியத் துறவோர் தங்கள் புனிதநன் னிலையும் பொய்யே
கண்ணிய மனத்தர் கூடா வொழுக்கமும் கருத்தி னுய்ந்தே.

நண்ணிய வுலக மீண்டு நன்கினி துணரு மாற்றான்
பண்ணிய லழகின் மிக்க பழந்தமிழ் நூல்க ளாய்ந்த
புண்ணிய சாமி குப்புச் சாமியாம் புலத்தின் மிக்கோன்
பண்ணிய விந்நூல் மாண்பு பயன்பெரி துடைத்தே யம்மா.

---

சென்னை - சிந்தாதிரிபேட்டை - மயிலை.

## ஸ்ரீமத், பாலசுந்தரம் செட்டியாரவர்களியற்றிய

நேரிசை வெண்பா.

தோமி னெறியாந் துறவு நிலைவிளக்கஞ்
சாமிகுப்பு சாமியண்ணல் சாற்றினான்—பூமிதனில்
நற்றவத்தர் போல நடிக்குங் கயவருளக்
குற்றமறுத் துய்யக் குறித்து.

---

சென்னை - சிந்தாதிரிப்பேட்டை,

## ஸ்ரீமத், சி. கல்யாணசுந்தர செட்டியாரவர்களியற்றிய

நேரிசை வெண்பா.

துறவு நிலைவிளக்கஞ் சொற்றா னுலகம்
நிறைவு தருநிதியை நேர்வான்—அறவினைசெய்
சாந்தமுறுஞ் சாமிகுப்பு சாமியெனுந் தக்கோன்பல்
ஆய்ந்தகலை தேறிவி னால்.

---

## ஸ்ரீமத், பொன்னுசாமி நாட்டாரவர்களியற்றிய

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பொன்போல விளங்குமனப் பொற்புடையா னனதானம் பொருந்தயார்க்கும்
அன்போடு செய்கின்ற சாமிகுப்பு சாமியெனு மான்றோன் பன்னூல்
தன்னேட்டோ டேபொருந்தவாய்ந்துநன் னிலைபெற்றதகைமைவாய்ந்தோன்
பன்னூலோ ரும்புகழத் துறவுநிலை விளக்கமது பகர்ந்தான் மாதோ.

### நேரிசை வெண்பா.

துறவு நிலைவிளக்கந் தூய்மையுற வாய்ந்தோர்
மறவியிலா வுண்ணேக்கு மன்னி—பெறவரிய
சீவன்முத்த ராகிச் சிதாநந்த மெய்திடுவார்
காவன்மனக் கட்டுக் கழன்று.

---

சென்னை-தண்டையார்பேட்டை-க்ஷத்திரியமித்திரன் பத்திராதிபரும்
தொ. சா. த. ப. சபைக் காரியதரிசியுமாகிய

## ஸ்ரீமத், விஜயதுரைசாமி கிராமணியாரவர்களியற்றிய

### அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

தவநெறியி லொழுகுகின்ற சாமிகுப்பு சாமியெனுஞ் சற்குணத்தான்
பவநெறியி லுழலாமற் பாரிலுளார் கடைத்தேறப் பரிவி னாலே
சிவநெறியி னிற்கின்ற நற்றுறவர் தீத்துறவர் செயல்க ளெல்லாம்
நவநெறியி லுறத்திரட்டித் துறவுநிலை விளக்கமென நல்கி னனால்.

---

சென்னை, தண்டையார்ப்பேட்டை
ஸ்ரீ பாலசந்த்ர விநாயகர் தேவஸ்தான தர்ம கர்த்தராயிருந்த
ஸ்ரீமத், த. காத்தலிங்க கிராமணியார் குமாரர் ஸ்ரீமத்,

## த. க. கங்காதர கிராமணியாரவர்களியற்றிய

### நிலைமண்டில வாசிரியப்பா.

திருவளர் சென்னைத் திகழ்நக ரதனில்
மருவிவாழ் கின்றவன் வளமெலா நிறைந்தோன்
அறநெறி தவறு தரும்பொரு ளீட்டு
முறைமையிற் சிறந்த மூதறி வாளன்
இரவும் பகலு மெக்கா லத்தும்
அரனடி யார்க்கன மன்புட னளிப்போன்
சிவபுண் ணியத்தைச் செவ்விதின் வளர்ப்போன்
தவபுண் ணியத்தைச் சார்தரு மன்பன்
சாமி குப்பு சாமியென் றுரைசெய்

நாமம் பூண்டோன் நலம்புரி கொள்கையோன்
நற்றுற வியல்புந் தீத்துற வியல்பும்
இணக்கம தாக வியையத் துறவு
நிலைவிளக் கமென நெறிநிறை நூலைப்
பலநூ லாய்ந்த பண்டிதத் திறத்தால்
நன்னூ லாய்ந்த நல்லுணர் வுடையோர்
தம்முளங் கொண்டு தனிமகி ழெய்த
அளித்தன னிதனை யடைவுட னேற்றுக்
களிப்புட னோதிக் கதிபெற னன்றே.

---

WITH great pleasure I have perused the book named **Thuravu Nilai Vilakkam** by T. A. SWAMY KUPPUSWAMY Avl. It combines in a condensed form the united labours of the most famous authors of the past and present on Asceticism.

In short, nothing better can be said about this book than to say that it is healthy in tone, just in sentiment, elevating in thought and beautiful in expression. If the effect of this publication be put to introduce one purer thought, or one higher aspiration into those human hearts weary with cares, or dark with passions or heavy with ambitions the object of the author will have been answered.

I heartily congratulate the author for the splendid work he has undertaken and may God bestow upon him long life and prosperity so as to enable him to put before the humanity many more works of this kind.

*1st August 1928.*
TONDIARPET,
MADRAS.

T. S. UMAPATHY GRAMONY,
*Senior, B.A., Class,*
*Pachayappas' College, Madras.*

---

இஃது சென்னை, ஜார்ஜ் டவுன் செகண்டரி ஸ்கூல்

தமிழ்ப் பண்டிதர்

ஸ்ரீமத், ம. மாசிலாமணி கிராமணியாரவர்களியற்றிய

நேரிசை வெண்பா.

வத்து நிலைய மலைவறுத்துக் காட்டுகின்ற
நித்தத் துறவு நிலைவிளக்கம்---முத்தர்
தலையசைத் துண்மகிழச் சாமிகுப்பு சாமி
நிலையமையத் தந்தா னெகிழ்ந்து.

---

சேலம் - திருவள்ளுவ நாயனார் சங்கத்திற்கும், திருக்கழுக்குன்றம்-வள்ளுவர் மடாலயத்திற்கும் தலைவரும், தமிழ் மருத்துவமணியுமாகிய சென்னை, பழைய வண்ணாரப்பேட்டை, நாயனார் பிரஸ்

## ஸ்ரீமத், நெ. மு. ஷ. ஷண்முகசுந்தர நாயனாரியற்றிய

### நேரிசை வெண்பா.

தொன்றூ லனைய துறவு நிலைவிளக்க
மென்று மொருநூ லெழுதியிரு—ளின்னலறச்
செய்தான்சா மிக்குப்புச் சாமி தெரிந்தோர்கள்
மெய்தா னெனவியக்க வே.

---

வித்தியாவதானம் ஸ்ரீமத், பிரம்பை பொன்னுவேற் பிள்ளையவர்களின் சகோதரரும், புராணிகர் - தேவாரம் ஸ்ரீமத், சம்பந்த முதலியாரவர்களின் மாணவருமாகிய புராணிகர் - தேவாரம் ஸ்ரீமத்,

## பிரம்பை - அப்பாதுரைப் பிள்ளையவர்களியற்றிய

### நேரிசை வெண்பா.

ஆனந்த ரூப வமுதா யொளிர்சச்சி
தானந்த சற்குருவின் றண்ணருளான்—மோனஞ்சார்ந்
தெல்லாமா யல்லவுமா யின்பவையாக் கண்ணுகுரு
சொல்லே சுருதியெனச் சூழ்ந்து.

பிறவிப் பிணியொழிக்கும் பெற்றியெலா முற்ற
துறவு நிலைவிளக்கந் தொன்மை—திறம்பாது
சாற்றினன் சாமிகுப்பு சாமி யெனுந்தூயோன்
ஏற்க வெவரு மியைந்து.

---

இந்நூலாசிரியரின் பாதசேகரர்
பிரசங்க சிந்தாமணி - திருவான்மியூர் - ஸ்ரீமத்,

## கோவிந்தசாமிப் பிள்ளையவர்களியற்றிய

### நிலைமண்டில வாசிரியப்பா.

பொன்னார் மேனிப் புனித சிவனார்
தன்னா ணையினாற் சதுர்முகன் படைத்த
இப்பெரும் புவிமகட் கெழின்முகம் போன்ற
செப்பருஞ் சென்னைத் திருநகர்ப் புரசைசார்
பேர்பெறும் நல்ல பெருமாள் பேட்டையா
மோர்பெரும் பதிதனி லோங்கிவாழ் வள்ளல்
நித்தியா நித்திய நிலையுணர் புத்திமான்
சத்திய ஞானமே தலைமையென் றோதுவோர்

கொல்லா விரதக் கொள்கைபூண் டொழுக
எல்லோர் தமக்கு மியம்புநற் குணத்தார்
ஏழைகட் கனந்தின மிட்டுணும் பெரியோர்
பிழையேன் வாழப் பேரருள் செய்வோர்
பூதியும் மணியும் பூண்டெவர் வரினும்
பாதம் பணியும் பத்தியின் மிக்கோர்
சிவன்றருஞ் செல்வமிச் செல்வமென் றுன்னிப்
பவமறு நல்லறம் பற்பல புரிவோர்
சிற்சபை தன்னிற் றேவர்கள் போற்ற
அற்புதத் தனிக்கூத் தாடுநற் சிவனார்
சங்கரா சாரியாய்த் தரணியில் வந்து
வெங்கனன் மானும் வேட்கையை நீத்த
உடல்பொரு ளாவியை யுதவிய மாணவர்
இடர்ப்படும் பிறவிநீத் தின்புற வுணர்த்திய
பிரம ஞானம் பெற்றவர் தம்முளே
தரம துறந்திருத் தருத்தி யிந்திர
பீடம் வளர்த்தருட் பெய்கர பாத்திரன்
நீடிய வழிவரு நிமலனுஞ் சற்குரு
சச்சிதா நந்த சாமியின் றாண்மலர்
உச்சியிற் சூடு மொப்பிலா வீரர்
அய்யாக் கண்ணு மாரியன் சரணம்
மெய்யாப் போற்றும் வித்தக ரென்குரு
சாமி குப்பு சாமியென் றிந்த
நேமி புகழுநன் னீதியார் செய்த
நிமலமாந் துறவு நிலைவிளக் கமெனும்
அமலநூன் ஞானநூ லாநந்த வெள்ளநூல்
உறவுநூன் மோக்கமா முசிதவீட் டினுக்குத்
திறவுகோற் போல்வது திகழறி வோர்க்கே.

---

இந்நூலாசிரியரின் பாதசேகரர் ஸ்ரீமத், காளத்தி

## இ. சிதம்பரசாமி புராணிக ரவர்களியற்றிய

### நிலைமண்டில வாசிரியப்பா.

பொன்புரை செஞ்சடைப் பூரண னருளால்
நிலவு முலகிடைக் குலவு மாந்தர்
அணைந்திடற் குரிய வாதியீ றில்லாச்
சிந்மய நிலையைச் செறிந்தமுன் னோர்கள்
நனிநா ளுழைத்து நவையறக் கண்ட
இல்லறந் துறவற மெனுமிரு நெறியைப்

பின்னவர் யாவரும் பேதுறு தெய்த
இயம்பி நிறுவின ரிணையிலா வருளால்
அவற்று ளாற்றவு மரிதினு மரிதாம்
மெய்ப்பொருள் பொய்ப்பொருள் விவேகம தெய்தி
அநித்திய விண்ணை யநித்திய மண்ணை
மித்தையா மின்மை மித்தையாம் வாழ்வை
நிந்தையே புகலும் பைந்தொடி மாதரைச்
சித்திரம் பேசும் புத்திரர் தம்மை
மருளினைப் பயக்கும் வெருளுறு பொருளைக்
காக்கைக் கிரையாம் யாக்கை யதனைக்
கான்ற சோறுக் கறுத்துக் கழித்துத்
துறவினைப் பூண்ட தூயர் செயலும்
வருந்தி முயன்று மாண்பொரு ளீட்டச்
சோம்ப லுற்றுத் தேம்புந் தூர்த்தராம்
போலித் துறவர் புற்றீ சற்போல்
எங்கணு மெழுந்து பொங்கு மன்புள
கரவிலாப் பத்தர் கைப்பொருள் வௌவ
இயமனைப் போல விடுக்க ணிழைத்தலும்
ஆசிலா தொளிர்திட வறிவினாற் கண்டு
கண்டன வற்றைக் கழறு விடிற்புவி
நானுப் பிறவியா னையுமென் றிரங்கி
மெய்த்துற வோர்கள் மெய்ந்நெறி தனையும்
பொய்த்துற வோர்புரி பொல்லாங் கினையும்
வகுத்து வகுத்து வண்ண வண்ணமாப்
பாலர் விருத்தர் பாவைய ராடவர்
படித்த வுடன்பொருள் பளிங்கெனக் கண்டிட
எளிய நடையிற் றெளியவெண் பாவால்
நிறுவித் துறவு நிலைவிளக் கமெனா
அபிதா னம்புனைந் தச்சுவா கனத்தில்
ஏற்றித் தமிழ்நா டெங்கணு முலவ
விடுத்தன னந்த மேதகு நூலில்
பொதிந்துள பொலிவுசால் பொற்புறு பொருள்கள்
பொன்னினு மணியினும் போற்றத் தக்கன
பாறேன் முக்கனி பாகினு மினிப்பன
அமுதி னாலு மடுதற் கரிய
பிறப்போ டிறப்பைப் பிளக்கும் வலியின
முச்சுட ரானு நிச்சய மாகப்
போக்க வொண்ணாத் தாக்கக விருளைப்
பாற்றி ஞானப் பரவொளி யளிப்பன

வானை நிகர்த்த யானை முகத்தனைத்
தன்னா நந்தத் தனிவடி வாகச்
செப்பிய வநுபவந் தெளிஞரே யோர்வார்
நாயைத் துரத்தல்போன் மாயையைத் துரத்திய
அல்லம னனுகய மாற்றவுஞ் சுவையது
துறவின ராகிய தூயவர் முடிமேல்
உறும்பட் டினத்தா ருயர்தா ளென்ற
அருமை கிளத்தற் கரியதா மம்மா
சச்சிதா நந்தந் தானென் றுணர்த்தச்
சச்சிதா நந்தத் தகுபே ருற்றனன்
என்று மொழிந்த திறம்பூ தளிக்கும்
மனத்தின் வயமா மாளுவேன் றன்னை
மனத்தை யழித்து வயங்கக் கனத்த
அகண்ட பரவெளி யாக்கினா னென்றதை
உன்னிட வுன்னிட வூறிடு மின்பம்
அந்தக் கரணத் தழிசெய லற்றார்
எக்குல மேனு மென்குரு வென்றது
அபேதப் பெருநிலை யளிக்குஞ் செம்மொழி
நல்லார் போல நடிப்பவர் தமக்கு
அறிவுகண் ணாடியா யறைவே னென்றது
திடஞா னத்தின் றிறலை யுணர்த்தும்
அகில சமயமு மவாவவா யிரத்துமுந்
நூற்று முப்பது நண்ணிய குறட்பா
பகர்ந்த பரனே பற்றிலாத் துறவருக்
கொப்பின் றலியா னுரைப்பதெப் படியெனச்
சொற்ற வருமையென் சொல்லுகேன் சொல்லுகேன்
தமைத்தரி சித்தோர் தழைந்தயல் காணார்
என்ற வநுபவ மியம்பற் கரியது
துறவரா வார்கள் சுயவறி வாக
நிற்பா ரென்றது நிலையறி வளிக்கும்
மெய்த்துற வோர்சிரம் வீழ்தர வரினும்
பொய்ச்சொற் றுணிந்து புகலா ரென்றது
தெளிஞ ரறிவின் றிறலினை விளக்கும்
பூதம் யாமல பொறியும் யாமல
என்ற திருப்பாட் டின்பொருள் தத்துவ
நியதி களைதலை நிகழ்த்துவ தாகும்
முத்தர் நூன்முன் மொழியுந் துதியில்
தம்மநு பவத்தைச் சாற்றுவா ரென்றதன்
அருமை யறிவை யறிந்தவ ரறிவார்

புலவ ரிடத்துப் புகழ்நிறை வாணியும்
புரண சிவமாப் பொலிவார் தம்பால்
நாமக ளோடு ஞான சத்தியும்
நடங்குயிற் றுவரென நவின்றிடு நுட்பம்
அகந்தை யற்றவ ரறிந்ததி சயிப்பர்
இதுபோ லெல்லை யிலாவிட யங்கள்
நிறைந்துள வவற்றை நிகழ்த்தப் புகுதல்
விண்மீன் கடலலை வீந்தவர் தம்மை
எண்ணி யளவிடற் கெழுதலை மானும்
அவ்வரு ணூலை யருளினு ரியாரெனின்
நெஞ்சங் குளிர்ந்து நிகழ்த்துவன் கேண்மோ
கருத்துடைப் பவர்விழை திருத்து ருத்தி
பந்த மறுக்கு மிந்திர பீடம்
பிரம சொரூப கரபாத் திரர்தம்
மெச்சு வழிவரு சச்சிதா நந்த
சாமியி னந்தாத் தனியருள் பெற்ற
ஆத்ம ஞானி யையாக் கண்ணு
தேசிக மூர்த்தியின் றிருவருள் பெற்றவர்
பேத மறுத்த பிரமாநு பூதியர்
அனைத்துல கத்தையு மணுவணு வாக்கி
விண்வடி வாக விளக்கி வைத்தவர்
சந்தைக் கூட்டந் தனைப்பார்ப் பதுபோல்
சமட்டியா யுலகந் தன்னைப் பார்த்துச்
சங்கற் பமதைத் தகர்க்கப் புகன்றவர்
எண்ண மெழுமிட மெங்கென நாடி
மனத்தை யழிக்க வழுத்திய குருமணி
தருசுக துக்கத் தாக்கற் றிருப்பவர்
திருக்குறள் மனனஞ் செய்தொப் பிப்பவர்க்
கொருகுறட் கோரணு வாக வுரைக்குங்
குறட்கெலாம் பரிசு கொடுக்கும் வள்ளல்
தம்மனை யணைந்திடு தரித்திரர் தமக்குக்
கஞ்சி வார்த்திடு கருணைச் செயலொடு
கதம்ப வன்னங் கவின்சகட் டேற்றித்
தெருவுதொ றய்த்துத் தினச்சோ றிலாமல்

அயர்ந்தழூங் குருக் கவ்வன மளிப்பவர்
குருஸ்தவங் கூறிய கோதிலாக் குருமணி
போத விளக்கம் புகன்ற புனிதர்
அரூப நிலைசொலுஞ் சொரூபா நந்த
விளக்க மளித்த களக்கமில் பரஞ்சுடர்
தனுவுறு நெறிசொலு மநுபவா நந்த
விளக்க மளித்த துளக்கமில் விமலர்
சாமி விளக்கஞ் சாற்றிய தேசிகர்
தெய்வப் புலமை செறிதிரு வள்ளுவர்
தோத்திர விளக்கஞ் சொல்லிய துல்லியர்
கற்பு விளக்கங் கழறிய கடவுள்
சொன்னய மலிந்த வன்ன தான
விளக்கந் தந்த வளக்கரு மீசர்
கருணை விளக்கங் கரைந்த தீர்த்தர்
நன்மதி தீப நவின்ற நாதர்
விபூதி விளக்கம் விள்ம்பிய தலைவர்
மோன நிலைபகர் ஞான சார
விளக்கம் வரைந்த வித்தக வத்தர்
விராகமெய் தாத வீண னேனைச்
சகமயக் குறுவனை தடுத்தாட் கொண்ட
சாமி குப்பு சாமியாம் பரமர்
இவர்பயன் கருதா தியற்றிய வுதவிக்
கெதிர்நலஞ் செய்தற் கியல்பிலா வடியேன்
அவர்பத மலரை யன்புட னகத்திற்
சிந்தித் தலகிலாத் திருப்புகழ் தம்மை
வழுத்தி வாக்கான் வணங்குதுஞ் சென்னியால்
மாமகம் வாழியே மழைவளம் வாழியே
நீறுங் கண்டியு நிலைத்து வாழியே
இந்திர பீடம தென்றும் வாழியே
திறஞா னம்முறு பரமா சிரியராம்
ஐயாக் கண்ணெனு மப்பன் வாழியே
இந்நூ லியற்றிய விறைவர் வாழியே.

# சிறப்புப் பாயிரம்.



பெங்களூர் - சென் ஜோசப் காலேஜ் மாஜி தமிழ்ப் பண்டிதர்

## ஸ்ரீமத், தரங்கம்பாடி - சபாபதிப் பிள்ளையவர்களியற்றிய

நிலைமண்டில வாசிரியப்பா.

பொன்மலிந் துயரிய புகழ்மலி சீர்சால்
சொன்மலிந் தோங்குஞ் சுவைதரு மினிய
செந்தமிழ்க் குவந்த திருவளர் செல்வந்
தந்தருள் வான்றோய் தகைமையிற் சிறந்த
கல்வியின் மேம்படு கட்டழ கார்ந்த
பல்வித நீதிகள் பகுத்தறி விக்கும்
வானமு தளித்த மலரடிக் கண்டாய்
ஞானத் தாயெனு நற்றவப் பெண்மணி
சான்றோ ருடைத்தெனச் சாற்றுதற் கிணங்க
ஆன்றோர்க் கணிகல மாகுந் திருக்குறள்
திருவாய் மலர்ந்தருள் தெய்வப் புலவர்
திருவா ருண்மொழித் தேவர் பெருமான்
பொய்யா மொழியர் பொற்புக ழேந்தி
அய்யன் பரிமே லழகர் மேலாம்
செய்ய நெறியிற் றிகழ்படிக் காசர்
நயவமு தூட்டு நற்பெருந் தேவனார்
அப்பய தீட்சித ராறுமுகச் சிவனார்
செப்பரும் பேற்றைத் தெளிந்தெமக் குரைத்த
சிவாசா ரியராந் திகழ்கச்சி யப்பர்
அவாவினை நீத்த வரியரா மானுசர்
ஆதிய வாய வருங்கவிப் புலவோர்
சோதிய துடனே தோன்றற் கிடமாய்
சிவஞான யோகியர் சிதம்பர முனிவர்
தவஞான மிக்கொளிர் தனிமுதற் சங்கரர்
வித்தியா வாதம் வியன்பெற நடத்திச்
சித்திபெற் றுய்யத் திருவருள் புரிந்த
உத்தமத் தலமிதென் றுரைப்பதற் கேதுவாய்
நித்திய பூசை நிவேதன மாதிய
பத்திமைக் கேற்பப் பரம னடியார்
வித்தகப் பணிவாய் மெய்ந்நலம் பெருக

இலங்கு முப்பா னிரண்டெனு நற்சிவ
தலங்க ளோங்குந் தற்பர னன்பின்
பாற்படுந் தெய்வப் பரகதிக் காளாய்
ஏற்படு மவருழை யிருநில வைப்பில்
ஆலிய தின்றி யருப்பம் வரினு
பாலியின் பெருக்காற் பயன்படத் துய்க்கும்
பாட்டிற் கின்புறும் பகருந் தொண்டை
நாட்டிற் சென்னை நகரதன் பாலமர்
வானை யளாவிய வண்பொழில் சூழும்
தேனையம் பதியிற் சிவப்பொலி வார்ந்த
குணமிகு பானுவின் குலத்துறு செல்வன்
மணக்குழ லம்மணி மகிழுமங் கப்பன்
செய்தவப் பேற்றின் சிவமணங் கமழ
உய்தி பெறவரு முணர்விற் சிறந்தோன்
அகத்தி னழகு முகத்தி லெனுமோர்
மகத்துவ மிக்க மாசிலா மகிபன்
உலகியற் கேற்ற வுறழ்வின் வகையால்
பலகலை தேர்ந்த பண்புடை யாளன்
இலையெனு தெவர்க்கு மியன்றதை யளிக்கு
நிலைதவ றாத நேர்பா டுடையோன்
வந்தவர்க் கிலையும் வருவார்க் குலையும்
உந்த விடுமன் புற்ற மனைவியர்
உடன்பிரி யாத வுவகையிற் பூத்த
கடன்பிற ழாத கடைப்பிடித் தொழுகும்
இல்லறம் வழாதிங் கியற்று நிபுணன்
பல்லறத் ததினும் பகரு மன்ன
தானமே மிகுகொடை தலத்துயர்ந் திடுமென
ஆனதை யுளமகிழ்ந் தன்புட னுதவும்
மானமே பெரிதுறு மாண்புடை யாளன்
வானந் தழைக்க வழங்குஞ் சீலன்
பொன்வலி வெற்றி புகழ்வாழ் நாடெனல்
நன்மகார் பெருமை நல்லூழ் கல்வி
அறிவழ கிளமை யாயநோ யின்மை
செறியுநன் னுகர்ச்சி சிந்தையின் மகிழ்ச்சி
துணிவொடு மாதிய சொற்பெரும் பேற்றை
அணிபெறப் பெற்றுய ரதிவிர தத்தன்
சார்குரு லிங்க சங்கம பத்தி
சீர்பட வியற்றுஞ் செய்யமா தவத்தன்

அந்த ணாள னருங்கவிப் புலவரை
அந்த நாளி லாதரித் தவர்போல்
இந்த நாளி லிவன்பெரும் புலவரைச்
சொந்த மாகுந் துணையெனக் கருதிச்
சமமாய் வைத்துத் தாங்கும் பெரியோன்
தமமா தியவெலாந் தள்ளிய மனத்தோன்
போதஞ் சொரூபம் புகலு மநுபவம்
ஏதமில் குருஸ்தவ மெழிலுலாஞ் சாமி
மன்னிய நற்றிரு வள்ளுவர் கற்பு
அன்ன தான மகமகிழ் கருணை
நன்மதி தீப நயந்தரு விபூதி
துன்மதி யகற்றித் தூய்மை நல்கும்
ஞான சார நவிலரும் விளக்கம்
தேனம ரமுதஞ் செவிக்குண வாக
முறையாய்த் தந்த முதிர்சுவை நலத்தின்
நிறைவை யோர்ந்த நின்மல முற்ற
மணவழ காதிய மாண்பினர் வியந்து
குணமிகு கவித்திறங் குலவிய வெண்பா
சீர்த்தி யீதெனச் சிறப்புப் பாயிரம்
நேர்த்தி யாக நிலவிடுஞ் சாத்துக்
கவிக ணிரம்பக் கவினுறு மதனால்
புவியிற் சான்றாய்ப் பொலிவுறச் செய்தோன்
நன்னயம் பருக நல்வழி காட்டும்
என்னவு மெளிதி லியம்பிய புனிதன்
வேதா கமத்தின் விரிபொரு ளனைத்தும்
ஆதா ரத்தொடு மதனைச் சுருக்கிக்
கட்டுரைப் படுத்திய கலையுணர் புலவன்
சட்ட திட்டச் சால்புறும் வலவன்
பட்டினத் தடிகள் பத்திர கிரியார்
நிட்டை கூடு நின்மல ராகி
உலகியல் வெறுத்து மொழுக்கங் குன்றாத்
தலைமிகு முண்மைத் துறவு பூண்ட
மனமுறு மவர்போன் மகிதலத் தந்தோ
இனமது பிழைக்க விருவரும் வெறுக்கப்
புலியது பசுத்தோல் போர்த்தது போன்று
பொலிகடா மடமுறும் போலித் துறவு
புனைந்திவண் டிரிந்து பொதிமா டெனவே
வனைந்திழி வயிறு வளர்த்திடற் கான
வஞ்சகக் கள்வரை வழிப்படுத் திடுவான்

நெஞ்சகத் துணிவு நிலைபட வேண்டிப்
பெருப காரப் பிரபல மதனைப்
பூருவ வழக்கின் பொற்பக லாது
சொன்னயம் பொருணயந் தொனிக்கப் பாடி
நன்னய மூட்டு நலங்கிளர் தகுதி
இன்ன படித்தென வெளிதினி துணர்ந்து
சொன்ன படியே துகளறுத் தியங்கும்
அன்னவர் பெருமைக் கனுகுண மார்க்கம்
பொன்னு மணியும் பொருந்து மாபோல்
வெண்பா வியலில் வெகுநய மல்கப்
பண்பாய் யாரும் பரிந்துவந் தேத்தப்
பிறங்கொளி பரவும் பெருமாள் பேட்டை
கறங்கு திரைக்கடல் காசினி முற்றும்
வழங்கு மப்பதி வாச முறுவோன்
முழங்குங் கீர்த்தி முழுதொருங் கடைந்தோன்
திருவுருப் பொலிவுந் திகழ்முக மலர்வும்
மருவிய மேலா மனத்து றுந் தயையும்
இறைவன் மலரடி யிரவும் பகலும்
முறையாய் வழுத்து மூதறி வுடையோன்
கலைமக ளோடு கமலையுங் கூடி
நிலைபட வொருங்கே நிற்ற விலையெனும்
நாலடி யாரி னல்லுரை யறவே
சாலவு மறத்திடத் தரணியி னிற்போன்
சாமி குப்புச் சாமி யெங்கோன்
தேமனு மினிய தெளிநற வமுது
முப்பழஞ் சர்க்கரை முதிர்சுவை கன்னல்
அப்ப வருக்க மாவின் பாலொடு
அளிகுழைத் திடினு மதுவும் பின்னிடத்
தெளிபொரு ளார்ந்த சீர்மைத் தாய
கருணை பூத்த கழிபே ருவகைத்
துருவத் துய்க்குஞ் சுகமருட் சுவையின்
கலைபல வூட்டுங் கனிவுறுந் துறவு
நிலைவிளக் கத்தி னீதிநூ றன்னை
வானிறை மகிழ்வால் வளம்பெற மல்கும்
நானிலம் வியக்க நல்கின னம்மா.

சுபம்! சுபம்!! சுபம்!!!

---

ஓம்
தத் ஸத்
பரப்ரஹ்மணே நமஃ.

பெருமாள் திருமொழி விரிவுரையாசிரியர் - பிரசங்க பூஷணம்,

ஸ்ரீமத், பு. பா. இரத்தினசபாபதி நாயகரவர்களெழுதிய

# முகவுரை.

மாண்புடைத்தாய மாகடல் சூழ்ந்த மகிதலத்து வாழும் மக்கள் யாவரும் அறம், பொருள், இன்பம், வீடென்னும் நாற்பாலுறுதிப் பொருட்களுள் ஒன்றையேனும் அன்றி ஒருங்கேனும் எய்த மிக்க விருப்பத்தினையும் முயற்சியினையுமுடையாரென்பது அவ்வவர் தத்தமனுபவவாயிலாக வுணரத்தகுவ தொன்றாம். இவ்வுறுதிப் பொருட்கள் நான்கனுள், முதல் இறுதி யொழித் திடைப்பட்ட இரண்டனைப்பெற விரும்புவார் இவ்வுலகின்கண் மிகப்பலராவர். முதற்கண் உள்ளதைப்பெற அவாவுவார் சிற்சிலரே யாவர். இம்மூன்றனையும் ஒதுக்கி இறுதிக்கண்ணுள்ள வீடுபேற்றினை விழையும் மெய்யறிஞர் சிற்சிலரினும் மிகச் சிலரே யாவர். இந்நான்கினையும் ஆராயுமிடத்துப் பொருளும், இன்பமும் இம்மை மறுமையில் நின்றொழிதலானும், அறம் இருமையுந் தந்து வீடு பேற்றுக்குச் சாதனமாக நிற்றலானும், வீடு பேரின்ப வடிவமாகலானும், இறுதியதான அவ்வீடுபேற்றினையே நல்லுணர் வுடையார் ஒருதலையா னெய்த ஒவ்வுவ ரென்பதூஉம், அதற்குரித்தாய சாதனங்களை யடைதற்குத் தகுதியுடைத்தான முயற்சிகளையே மேற்கொள்வ ரென்பதூஉம் தாமேபோதரும்.

பண்டைக்காலப் பழந்தமிழ் நாடு இந்நெறிபற்றிப் பெரிதுங் கழிபேரின்பத்திற் றிளைத்திருந்த தென்பதை அருந்தமிழ் நூற்களால் அறிகின்றோம்.

அந்தோ! காலவேற்றுமையால், கலியின் தொடர்பால், அக்கால மாந்தர்க்கு இக்காலத்திடமில்லை; நாட்டின் மேன்மையை நாடியுழைக்கும் உத்தமப் புலவர் உறக்கங்கொண்டனர்; பொன்னென மிளிரும் நன்னயப் பாக்கள் நலிந்துவிட்டன; அந்தணரென்போர் அழிந்து கழிந்தனர்; ஒழுக்கமென்பது மொழிந்தேபோயது; இரக்கமென்னு மெழிற் றெய்வமாதும் இறந்தாளொத்தாள்; கொடுமை யென்னும் கொடிய வரக்கன் கொடிபிடித் துள்ளான்.

இம்மாறுதல் கண்டு மனமறுகிநின்ற மாண்புடையறிஞர், யாதேயாயினும் ஆகுக; எண்டோண் முக்கண் எம்மான்றிருவருளெமக்களி புரியுமெனக் கருதி, அந்நெறிகாணார்க் கறநெறியுறுத்தி, அன்னுரைக் காத்தற் பொருட்டுக் கங்கணங் கட்டினர்; காலத்திற் கியைந்தவாறு பிரசார வழியானும் நூல்யாக்குந் துறையானும் நாட்டினை

யொருசிறிது நல்வழிப்படுத்தினர்; அதுபோழ்து அவர்தமக்கு நேர்ந்த அரும்பே ரெதிர்ப்பனைத்தும் அழிந்து பட்டன; தூயவுள முடை யன்னார்தம் தூயவெண்ணம் பழுதுபடுங்கொல்?

பின்னர் அவர்கள் அருளிய அறத்துறை விரிக்கும் அரும்பெருமக்கள் பலர் அவனியிற் றோன்றினர். அந்தோ! அப்பெருமக்கட் காதரவின்மையால், அன்னார் வறுமையென்னும் கொடும்பிணி வருத்த யாதொன்றுஞ் செய்ய வியலாராயினர்; எனி னும், தம்மாலியன்றதோர் நற்பயன்றன்னை நாட்டிற்களிப்பான் றொ டங்கினர். நாடு இத்தகை நிலை யடைந்துள விந்நாளில், நாமகளும் பூமகளும் நண்ணியவராய், தண்டமிழ்ப் புலமைமுற்றிய தனிக்கவிஞ ராய், அருந்துறவோர் வேண்டும் அகத்துறவினராய், பாகொழிக் கும் நாவும் பணிகொழிக்கும் கரமுமுடையவராய்ச் சென்னையம் பதிக்கண் வதிகின்றார் ஸ்ரீமத், தே. அ. சாமி குப்புசாமி யென்னும் அடிகளார். அவர்களே "துறவுநிலை விளக்கமென்னும்" இந்நூற்கும் ஆசிரியர் என்று அறிமின்; உலகீர்!

பாவலர் தோற்றம் அருகியுள்ள விந்நாளில், தமிழ்நாடு பாம ணம் மறந்து வருந்து மிக்காலத்தில் மெய்ந்நூலோதி மெய்யுணர்வு பெற்ற மெய்யராய அடிகளால் இந்நூல் அருளிச் செய்யப்பட்டது மிகவும் போற்றத் தக்கதே. இதுபோல, காலநிலைக்கேற்பப் பல விளக் கம் அருளி யுள்ளார் அடிகள். தாய்நாட்டிற்கவை தந்தபயனைத் தமிழ்நாடறியும்.

இக்காலநிலை துறவுடையார்மாட்டுத் தமிழுலகம் பெரிது மன்பு கொண்டு அவர்தமக் கரும்பணியாற்றத் தொடங்குவதே யாகும். அவற்றான், வயிற்றுச் சோற்றுக்கு வழியிலாதாரும், கள்ளத்தனத் தில் கருத்துடையாரும், மங்கையர் காமம் பொங்கி நின்றாரும், துறவு தாங்குங் காவுகொண்டனர். இவர்கள் அகநிலையை யாய்ந்துணராத மக்கள் இவ்வன்னெஞ்சரான் வருந்தலாயினர்.

குருவருள் காட்டுங் "குருஸ்தவ" மும், பேதம்விலக்கும் "போத விளக்க" மும், நிருபாதிக நிலைசொலும் "சொரூபாநந்த விளக்க" மும், அருணிலை விளக்கும் "அநுபவாநந்த விளக்க" மும், சேமி புகழுநற் "சாமி விளக்க" மும், வெருவுறுநிலை சொலும் "திரு வள்ளுவர் தோத்திர விளக்க" மும், கன்னியருய்நெறி கழறுகின்ற "கற்பு விளக்க" மும், அரும்பசி யாற்றிடும் "அன்னதான விளக்க" மும், கவலை யறுக்கும் "கருணை விளக்க" மும், தன்மநிலைசொ லுங் "நன்மதி தீப" மும், நீறிடாதார்வாழ்ந்தாரென்னும் "விபூதி விளக்க" மும், ஊன மழிக்கும் "ஞானசார விளக்க" மும் அருளிய அடிகளே துறவினர் நெறிவிளக்கும் "துறவுநிலை விளக்கம்" என்னும் பெயரமைத் திந்நூல் யாத்தனர். இதன்பொருள், துறவின் நிலையை (ஆணவ விருளின் வதிபவர்க்கு) உணர்த்தும் விளக்குப் போல்வ தொரு நூல் என்பதாம்.

இனி ஆசிரியர் அருளிய இந்நூலிற் சிறிது கருத்தைச் செலுத்துவோம். தமிழ் வளம் அருகியுள்ள இந்நாளில், ஓர் நூல் யாப்பது அருமை. அடிகள் ஒல்லும் வகை முயன்று, மண்ணுலகென்னும் மாக்கடல் நடுவண் தற்கால நாகரிகப் புலவர்களென்னும் சுருள் சுருளான மலைச்செறிவு ஒருபால்முட்ட, பழம் புலவர்களென்னும் சுழற்காற்று மற்றொருபான் மோத, இவ்விரண்டிற்கு மிடையே இந்நூல் நாவாயைச் செலுத்தியிருப்பது பெரிதும் பாராட்டற் பாலது. பல இன்னல்களுக் கிடையே எமது பார்வைக்கு வந்த இந்நூலை, முற்றும் ஊன்றி ஆயப்போதிய ஒய்வு எனக்குக் கிடையாமை யானும், அத்தகைய ஆய்வு முன்னுரை ஏலாதாகலானும், தமிழ்த்தாயை வணங்க மறந்த நாட்டவர்க்குச் சொற்சுவையும் பொருட்சுவையும் இனியா வாகலானும், அவ்வழி யாய்தல் விடுத்துத் தாலிபுலாக நியாயம்பற்றி எம் சிற்றறிவிற்குத் தெற்றென விளங்கிய சிலவற்றை மட்டும் ஈண்டு எடுத்துக் காட்டுகின்றேம்.

ஆசிரியர் காப்புச் செய்யுளில் "ஆனைமுகத் தரசே யானந்த வென்வடிவே,......துறவுநிலை விளக்கம் வழுத்த" என்று நூற்பயனைத் தொடக்கத்திலேயே குறிப்பது காண்க. ஆசிரியர் இச்செய்யுளால் ஆன்றோர் சென்றவழி விநாயக வணக்கஞ் செப்பினர். இங்ஙனங்கூறல் எடுத்துக்கொண்ட நூல் இடையூறின்றி யினிது முடிதற் பொருட்டாகும். இது கவிமரபு. மக்கள் தம்பிறப்பின் பயனாக அடைய வேண்டிய இறுதிப்பேறு துன்ப மின்றிய இன்பமே யாகும். எந்நூற்களும் இறைவனை இன்பவடிவின னென்றே யியம்புகின்றன. துறவுநிலை இன்ப நிலையத்தையே குறிக்கொண்டு நிற்பது வெள்ளிடைமலை. ஆசிரியர் அடுத்த செய்யுளில் "ஓம் வடிவே" என்று குமாரக்கடவுளை விளிப்பது கற்றவர் தமக்குக் களிப்பினை யூட்டும். யானைமுகத் தண்ணலுக்குத் திருமுக மட்டும் பிரணவ வடிவமென்றும், முருகக் கடவுளுக்குப் பிரணவமே திருமேனி யென்றும் நன்னூல் பலவும் நவிலுவ தறிக. மேலும், தமிழ்த் தலைவனாய முருகுடைக் கடவுளுக்குப் பண்டைய சொல்லாய ஓங்காரத்தின் வடிவின னென்று வடிவ இயல்கண்டது பெரிதும் பாராட்டற் பாலது. எல்லா எழுத்தொலிகட்கும் முதலாய் அகத்தும் புறத்தும் இயற்கையாய் ஒலிக்கும் ஓசையே ஓங்காரமெனப்படும். தஞ்செவியை யொருவர் கையாலடைத்து நோக்குழி அதனகத்தே அஃது ஓவென்றிரைதலையும், புறத்தே அங்ஙனமே அஃது இசைத்தலையும் காண்கின்றேம். செயற்கையி னெழும் ஏனை ஓசைகளனைத்தையும் அடக்கி, உட்குடைவாக எப்பொருளைச் செவியில் வைத்துக் கேட்பினும் இவ்வோகார வோசை இயற்கையாக வொலித்தல் கேட்கப்படும். யாண்டும் ஓவாதொலிக்கும் இவ்வோசையினால் உந்தப்பட்டே உலகங்களும் உலகத்துள்ள பல்வகை யுடம்புகளு மியங்குகின்றன.

இவ்வோசையானது படைத்தல், காத்தல், அழித்தல் என்னு முத்தொழிற்களையு மியற்றவல்ல தொன்றும். ஓசையானது இயங்கும் முறையாலும் இயக்கப்படு முறையாலும் அணுக்களைச் சேர்த்தலும் சேர்த்து நிலைப்பித்தலும் சேர்த்தவற்றைப் பிரித்தலுஞ்செய்து போதருதலை இஞ்ஞான்றை இயற்கைப்பொருள் நூலார் ஆய்ந்து விளக்கியிருத்தலின், இவ்வோகார வொலி உலகங்களையும் உடம்புகளையும் தோற்றுவித்தும் நிலைப்பித்தும் அழிப்பித்தும் நடைபெறுதல் மறுக்கப்படாத உண்மையாம். இவ்வோங்கார வொலியைப் பகுத்து நோக்குமிடத்து, அஃது அ+உ+ம் என்னும் மூவொலிகளாய்ப் பிரியும். இவற்றுள் எல்லாச் செயற்கை யொலிகட்கும் முதற் பிறந்து படைத்தற் றொழிலைப் புரிவது அகாரவொலி; அதன் பின்னே உதித்துச் சிறிது நேரம் நிற்பதாகலின் அதனால் படைக்கப்பட்ட பொருட்களைத் தத்தங்கால எல்லையளவும் நிலைபெறச்செய்வது உகாரவொலி; மகாரவொலி இதழிரண்டும் பொருந்துமிடத்துப் பிறப்ப தாகலின், அஃது அங்ஙனம் நிலைபெற்ற பொருட்களை யழிந்துபோகச் செய்வதாம். ஓங்காரம் இவ்வாறு இம்மூன்றொலிகளையும், அவற்றா லியற்றப்படும் முத்தொழிற்களையும் அடக்கி நிற்கும் இயற்கை ஓசையா யிருத்தலின், எவற்றினும் சிறப்புடைத்தாம். இவ்வோங்காரத்தின் நிலையறிந்தே தமிழ்ப்பெருந் தெய்வத்தை "ஓம் வடிவே" என்று விளித்த பாவின் அருமையைத் தமிழுலகஞ் சுவைத்துச் செல்லுமாக.

ஆசிரியர் பரசிவ வணக்கத்துள் "வெள்ளி மலைக்கரசே வேதத்தின் உட்பொருளே" என்றது மிக்கு மாழ்ந்து நுணுகி நுணுகி யாராய்ந் தறிந்து ஆநந்திக்கற் பாலதொன்றும்.

நூற் றொடங்குழி நூனெறி யுணர்ந்தாங் கொழுகுநர் சிந்தித்துக் கொளற்பாலதும் வேதாகமங்களால் விதந்தோதப் படுவதும் அதிதீவிர பக்குவமுடையார்க்கு உபதேச மகா வாக்கியமாயது மாய "தத்வமசி" என்னும் மங்கலச் சொல் புணர்க்கப் பட்டமை காண்க. "அமலனுருவ மடைந்தார்கள் விடயபேதத் தடைந்தாலும், கமலத்தருநீர் போலக் கலப்பதில்லை கருதுங்கால்" என்னும் சிவதருமோத்தரப் பாவை யடியொற்றி "தாமரை நீர்போலச் சகத்துறுவார், மெய்த்துறவர்" என்றார். இசைவருக; வசைவருக; இன்புறுக; துன்புறுக, என்பு சூழ்ந்த தசையறுக; உடலிளைக்க; பருத்திடுக; சிறுத்திடுக; யாதுறினு முறுக; சிறிதுங் கவலேம்; இது பண்டை வினையால் வந்த பயனென்று அகமகிழ்வர் ஆன்றோரென்பார் "பற்றொழிந்த வுத்தமர்க்குப் பாவபுண்ணி யங்களில்லை" என்றார். "தற்பெருமை யாவரையுந் தாக்கி யழிக்குமெனத் தற்பெருமை காட்டார் தவத்துறவர்" என்றார்; தற்பெருமையொன்றானே கௌசிகன் முதலியோர் தவமிழந்து தவித்தன

ராதலின். "எல்லா மறிந்தவரும் ஏதுமறி யாதவருமில்லை" என்னும் கடப்பாடேய்ந்த உளத்தவ ரென்பார் "எல்லா மறிந்தேம்யா மென்றுரையார்" என்றார். நீர்நீக்கிப் பால் பருகும் அன்னத்தைத் தூயவுளமுடையார்க் குவமை கூறும் தமிழ்நாட் டியல்பினை நன்கறிந்த அடிகள் "பாலுடனே நீர்கலந்து பண்ணுமன்ன முன்பு வைத்தாற், பாலுண்டு நீர்பிரிக்கும் பான்மை போல்சிலர்·····நிற்பர்" என்று அருளியது காண்க. "கானமயிலாடக் கண்டிருந்த வான்கோழி" என்னும் பாவை யடியொற்றிக் "கான மயிலாடத்தைக் கண்டு கற்ற வான் கோழி" "தான்கற் றுரைப்பதுபோற் றுனடங்கா தேசபையிற், கான்மயிலைப் போலாடிக் கைந்நீட்டி" என்னும் பாக்கள் அமைத்துக் காட்டியிருப்பது மிக அருமையா யிருக்கின்றது. "ஞாயமல கள்ளுணயக்க வுண்ப தென்போமேற், காயம் வலுத்தாற் கடவுடனே, நேய முடன், போற்றற்கா மென்றே புதியவுரை கற்பிப்பார், சீற்றமற்ற மெய்த்துறவர் தேர்ந்து" எனும்பாவைக் கண்டதும், யாமும் புலவர் சிகாமணியாய எமது நண்பர் ஒருவரும் ஆத்திசூடியின் அரும்பொருள்என்னும் சொற்பொழிவாற்றும் ஓரிடத்திற்குச்சென்றபோது, ஆங்கோர் துறவியார் "ஊக்கமது கைவிடேல்" என்பதை ஊக்க-மது-கைவிடேல் என்று பதச்சேதஞ் செய்து பொருள் கொண்டமை நினைவிற்கு வருகின்றது. இந்நூற்கண் திருக்குறள் முதலிய பன்னூற்களின் செம்பொருட்கள் விரவிவருவது உய்த்துணரற் பாற்று. பொய்யறிவிலையத்தவர்கள் இந்நூனெறி யுணர்ந்தேனும் அமைதி பெறுவார்களாக.

"பட்டினத்துப் பிள்ளையைப்போல் ஆருந்துறக்கை யரிது" எனும் உண்மையை நிலைநாட்டினார்; "துறவுநெறி நிற்குந் தூயர்முடி மேல், உறும்பட்டினத்தார்" என்னும் பாவினால். சாதிக்கொடுமை பாராட்டுங் கொடியவருக்கு நற்புத்தி புகட்டுவான் "அந்தக் கரணத் தழிசிவ சேட்டையற்றால், எந்தக் குலத்தாரு மென்குருவாம்" என்றார். "நூற்காரணம் முதலிய விடத்து அமைத்த பாக்கள் கூர்ந்து நோக்கத் தக்கன. அவையடக்கம் பொய்த் துறவோரையும் போலிப் புலவர்களையுந் தெருட்டி நன்னெறியில் நிறுத்து மென்பதில் ஐயமின்றாம். காவியுடையும், கண்டிகையும், திருநீறும், விடயத்தின்கண் தாவிப்பாயும் மனத்தை வெல்லுதற் பொருட்டு அணியப்படுவனவாம் என்பதை "காவிகண்டி நீறணைத்துங் காதலுட னேபுனைந்து, தாவுமனம் வென்ற தவத்துறவர்" என்னும் செய்யுளால் விளக்கினார். "முன்னுடுபின் சோதித்து மூடமற்ற புத்திகண்டு, தன்னை யறிநெறியைச் சாற்றுவார்' என்றது "இயற்கைகுணஞ் சோதித்து முன்னே பின்னே யாவையுமாம் பிரமநீ யென்னல் வேண்டும், வியப்புறவாசையிலுழல்வார்க் கிவ்வா றோதின் மீளாத நிரயகில் வீழ்த்த தாகும்" என்னும் ஞானவா சிட்டத்தை அடியொற்றிய தென்க.

ஆசிரியர் மெய்த்துறவரைக் குறிப்பிடும் பாக்கள் ஒவ்வொன்றையும் விடாது நோக்குமிடத்து,

"மாரனை வெல்லும் வீர நின்னடி"
"தீநெறிக் கடும்பகை கடிந்தோய் நின்னடி"
"பிறர்க்கற முயலும் பெரியோய் நின்னடி"
"துறக்கம் வேண்டாத் தொல்லோய் நின்னடி"
"எண்பிறக் கொழிய இறந்தோய் நின்னடி"
"கண்பிறர்க் களிக்கும் கண்ணோய் நின்னடி"
"தீமொழிக் கடைத்த செவியோய் நின்னடி"
"வாய்மொழி சிறந்த நாவோய் நின்னடி"

எனவரும் மணிமேகலை அடிகளே நினைவுக்கு வருகின்றன.

ஆசிரியர் இந்நூற்கண் அரியவுவமைகளைப் பெய்யாது மிக எளிய உவமைகளைப் பெய்திருப்பது எனது கருத்தை ஈர்த்தது. அகத்துறவுடையார் எளிய வாழ்வுகொண்டு யாவர்க்கும் எளியராயிருத்தலான் அவர்கள் நூலும் எளிய நடையில் எளிய உவமைகளை [illegible]ரிதாய்ப் பெற்றிருத்தல் வேண்டுமென்பது ஆசிரியரின் கருத்துப் போலும்; அவ்வெளிமை திகழும் கவிகளிலுள்ள நயங்களை வாசிப்போர் சுவைத்துச் செல்வாராக.

இந்நூல் முற்றுங் காண்பார்க்கு ஆசிரியரின் தமிழ்ப் புலமையும், முயற்சியின்றிக் கருத்து வழி நின்று சொற்களைப் பெய்யுந் திறமும், பொருட்கண் அவருள்ளந் தோய்ந்து இன்புறுந் தன்மையும் பிறவும் எம்மகத்தைத் தம்வயப் படுத்தின. இப்பாக்களைத் தமிழ்மக்கள் திருமுறைக்குப் பன்முறை ஓதி ஓதி உய்வார்களாக. உரையாசிரியர் அவைகட்கு விரிவுரை காண்பார்களாக.

தமிழ்நாடு நலமேவோர் குறிப்பறியாது தயங்கும் இக்காலத்தில், மக்களின் இந்நூலை யாக்கப் புகுந்து திறம்படத் தங்கடமையாற்றிய ஸ்ரீமத், தெ. அ. சாமி குப்புசாமி அடிகட்குத் தமிழுலகம் இயற்றுங் [illegible] [illegible] யாக்கதி

இதுபோதும் பலவிளக்கம் பாடி முடிக்க, ஸ்ரீமத், தெ. அ. சாமி குப்புசாமி அடிகட்கு நீண்ட வாழ்வும், நோயற்ற யாக்கையும் [illegible] ஓங்கி வளருமாறு எல்லாம்வல்ல இறைவன் திருவருள் செய்வானாக.

சுபம்! சுபம்!! சுபம்!!!



திருத்துருத்தி - இந்திரபீடம் ஸ்ரீ கரபாத்திர சுவாமிகளாதீனம்

ஸ்ரீமத். ஈசூர். சச்சிதாநந்த சுவாமி.



திருத்துருத்தி - இந்திரபீடம் ஸ்ரீ கரபாத்திர சுவாமிகளாதீனம்

ஸ்ரீமத். கே. அ. சாமி ரூப்புசாமி.

ஓம்

தத்சத்

பரப்பிரஹ்மணே நமஃ.





# துறவுநிலை விளக்கம்.

## பாயிரம்.

காப்பு.

விநாயகக்கடவுள் வணக்கம்.

நேரிசை வெண்பா.

ஆனை முகத்தரசே யாநந்த வென்வடிவே
மோனை யெதுகைநேடின் முந்துகுறி—லேனை
யெழுத்தறியா நாயே னெழிற்றுறவி னுண்மை
வழுத்தவருள் செய்வாய் மகிழ்ந்து.

சுப்பிரமணியக் கடவுள் வணக்கம்.

ஆறு முகத்தேவே யாறுறு நீத்தவருள்
ளூறும் பெருந்தேனே யோம்வடிவே—வீறுபெற
நற்றுறவர் தீத்துறவர் நல்லொழுக்கந் தீயொழுக்கஞ்
சொற்றிடவே செய்வாய் துணை. (க)

சுத்தமனத் துள்ளொளிருந் தூய வறுமுகனைப்
பத்தியிலா நாயேன் பணிந்தேத்தி—யெத்து
மனத்திரையைப் போக்கியொளிர் மாவெளியாத் தன்னை
யுனத்துறவு நூலளித்தே னோர்ந்து. (உ)

## பரசிவக்கடவுள் வணக்கம்.

வெள்ளி மலைக்கரசே வேதத்தி னுட்பொருளே
யெள்ளளவு மாறாத வென்னறிவே—தெள்ளியருள்
உற்றிருப்போ னேதுறவி னுண்மை நெறியுரைக்க
கற்றெளிவை நல்கியரு ளான்று. (ங.)

## திருமால் வணக்கம்.

முன்னாளி லர்ச்சுனற்கு மூடமறக் கீதைதனைப்
பின்னமறச் சொற்ற பெருமானை—யென்னறிவாக்
கண்டு துறவுநிலை காணவிந்த நூலளித்தேன்
பண்டைமறை சம்மதிக்கப் பார்த்து. (ச)

## அல்லமதேவர் வணக்கம்.

நாயைத் துரத்துதல்போ னாடறியச் சாலஞ்செய்
மாயை துரத்திய மாதேவன்—றாயைநிகர்
நல்வடிவ வல்லமன்ற னற்றாண் மனத்துன்னி
நல்லவிந்த நூலளித்தே னன். (ரு)

## வசவதேவர் வணக்கம்.

சத்துச்சித் தாநந்தந் தன்வடிவா நின்றொளிரு
மத்துவிதா கண்டவெளி யாதற்குப்—பத்தருக்
கன்னமிடல் சாதனமென் றூற்றி யறிவித்த
வன்னைவச வேச னரண். (சா)

எத்திசையும் பத்திநிலை யேதமற நன்றாற்றா
முத்திநிலை பெற்றுய்ய முன்னாளிற்—பத்தரடி
போற்றியன்ன மிட்ட புனிதவச வேசனடி
போற்றியிந் நூல் சொற்றேன் புகழ்ந்து. (எ)

### மருள சங்கரதேவர் வணக்கம்.

அருளா ரடியா ரணிசேட முண்ட
தெருளார் மருளசங்க தேவை—யிருளோடப்
போற்றிப் பணிந்து புனிதவிந் நூலதனைச்
சாற்றினே னுய்யச் சகம் (அ)

### சைவசமய குரவர்கள் வணக்கம்.

என்னப்பன் சம்பந்த னின்பவடி யப்பர்தாள்
பொன்னனைய சுந்தரன்றன் பூங்கழல்க—டன்னிகரின்
மாணிக்க வாசகன்றன் வண்ண மலரடிகள்
பேணியிந் நூலுரைத்தேன் பெட்பு. (௯)

### ஆழ்வார்கள் வணக்கம்.

தாழ்வாம் பிறப்பறுத்த சாந்தநிலைப் புண்ணியரா
மாழ்வார் மலர்த்தா ளகத்துன்னிப்—பாழ்மாயப்
பொய்த்துறவு மெய்த்துறவும் பூதலத்தோர் கண்டுய்ய
வுய்த்துணர்ந்திந் நூலளித்தே னோர்ந்து. (௧0)

### சங்கராசாரிய சுவாமிகள் வணக்கம்.

நற்றுறவுந் தீத்துறவு நன்குணர்ந்து ஞாலமுயச்
சொற்றிடவே நாயேன் றுணிந்திட்டேன்—கற்றவர்தஞ்
சங்கையெலாஞ் சங்கரித்த சங்கரா சாரியர்தம்
பங்கயத்தாட் போற்றிப் பணிந்து. (௧௧)

### தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனார் வணக்கம்.

அருளே யுருவா வவதரித்தென் போல்வா
ரிருணீத் தழிவிலின்ப மெய்த—வொருகுறணூல்
தந்ததிரு வள்ளுவனார் தாண்மலரைப் போற்றியிந்நூ
றந்தனன்யா னீத்தார் தமக்கு. (௧௨)

### பட்டினத்துச் சுவாமிகள் - பத்திரகிரி சுவாமிகள் வணக்கம்.

துறவு நெறிநிற்குந் தூயர் முடிமே
லுறும்பட்டி னத்தா ருயர்தாள்—திறஞானப்
பத்ரகிரி யார்தாள் பணிந்திந்த நூல்சொற்றேன்
சித்தியுறப் பொய்த்துறவர் தேர்ந்து. (௧௩)

## அருணகிரிநாத சுவாமிகள் வணக்கம்.

கருப்பற் றகன்றிடவே காங்கேயன் றனை
விருப்பொடு போற்றி விமலத்—திருப்புகழை
நல்கு மருணகிரி நாதரடி யேத்தியிந் நூன்
மல்க வளித்தேன் மகிழ்ந்து. (கச)

## திருவண்ணமலை - குகைநமச்சிவாய சுவாமிகள் வணக்கம்.

கண்ணுறு பாயக் கருதன்ப ருக்கருளு
மண்ணு மலையா ரமர்தலத்தி—னண்ணுங்
குகைநமச்சி வாயர் குரைகழற்றாட் போற்றித்
தகைமையுறிந் நூலளித்தேன் றான். (கரு)

## இந்திரபீடம் - கரபாத்திர சுவாமிகள் வணக்கம்.

பந்த மறுத்துப் பரஞானந் தந்தாளு
மிந்திரபீ டத்தரசா மேகசிவன்—முந்து
கரபாத் திரதேவின் கஞ்சவடி போற்றி
மரபாவிந் நூலளித்தேன் மன். (கசு)

## குமாரதேவர் வணக்கம்.

அமரர் முதலோ ரடிபணிந் துய்யச்
சமநிலையாய் பன்னுங்கு சாத்ர—நமரெல்லாங்
கொண்டேத்தத் தந்த குமாரதே வின்னடியைக்
கண்டிந்நூல் சொற்றேன் கசிந்து. (கஎ)

## திருவாரூர் - தட்சணாமூர்த்தி சுவாமிகள் வணக்கம்.

கருவகற்று மாரூர்க் கவின்பதியின் மேவுந்
தெருள்தட்ச ணாமூர்த்தி தேவி—னருளாற்
றுறவு நிலைவிளக்கஞ் சொற்றேன் றுறவோர்
திறவறிவு மேவியுய்யத் தேர்ந்து. (கஅ)

### நாகை - அருணாசல சுவாமிகள் வணக்கம்.

மண்ணகத்தா ருய்யும் வழிமுறையாக் காட்டுமா
தண்ணருளான் மாறுடாராத் தாமுதித்த—கண்ணுஞா
நாகையரு ணாசலனா் நற்றாள் பணிந்திந்நூ
லோகையுடன் சொற்றிட்டே னோர்ந்து. (கக)

### பிறைசை - அருணாசல சுவாமிகள் வணக்கம்.

இந்திர பீடத் தெழிற்கர பாத்திரர்தஞ்
சந்தவா தீனந் தழைத்தோங்க—வந்த
பிறைசையரு ணாசலனைப் பேணிப் பணிவேன்
நிறையறிவா நிற்க நிலைத்து. (உ0)

### சச்சிதாநந்த சுவாமிகள் வணக்கம்.

சச்சிதா நந்தநிலை தானேதா னென்றுணர்த்தச்
சச்சிதா நந்தப்பேர் தானுற்றிங்—குச்சிதமா
மானிலத்தார் போற்றவந்த வள்ளல் குருபரன்றா
ணனிலைந்து போற்றிடுவே னன்கு. (உக)

நப்பெருமைச் சச்சிதா நந்தபர மாசிரியன்
தப்பின்றி யென்னுளத்திற் றங்கிடலா—லிப்புவியி
லென்ன பயமெனக் கிந்நூலோ வெந்நூலு
மன்ன வளிப்பேன் மகிழ்ந்து. (உஉ)

### ஐயாக்கண்ணு சுவாமிகள் வணக்கம்.

அய்ய மறுத்தாண்ட வையாக்கண் ணுக்குரவன்
துய்ய மலர்த்தாள் தொழுதிறைஞ்சிச்—செய்ய
துறவு நிலைவிளக்கஞ் சொற்றே னுலகோர்
துறவர் நிலையளக்கச் சூழ்ந்து. (உ௩)

கணக்கில் பிறப்புற்றுக் காழ்நரகாழ் வேனை
யணலயாக் கண்ணு மமல—னிணவுடனீ
யல்லவென் றென்னை யகண்டவெளி யாக்கியதா
னல்லவிந்த நூலுரைப்பே னன். (உ௪)

மனத்தின் வயப்பட்டு மாளுவேன் றன்னை
மனத்தை யழித்து வயங்கக்—கனத்த
வகண்ட பரவெளியா வாக்கினு னன்றே
யகண்டவடி வானே னமர்ந்து. (உரு)

புனிதக் கரந்தலையிற் பொற்பவைத்த நாளாப்
புனிதனு வாழ்கின்றேன் போத—புனிதசிவ
வென்வடிவுங் கண்டிட்டே னேதுங் குறைவில்லே
னென்னைவிட வேறிலதா லிங்கு. (உசா)

## மகான்கள் வணக்கம்.

பந்தமறச் சொந்தவுரு பார்த்தபா ஞானிகடாள்
சிந்தைகுடி கொண்டு திகழவே—வந்தித்துத்
தோத்தரித் திந்தத் துறவு நிலைவிளக்க
நாத்தகுமா சொற்றே னயந்து. (உஎ)

அந்தக் கரணத் தழிசெவ சேட்டையற்று
லெந்தக் குலத்தாரு மென்குருவா—முந்தப்
பணிந்தேத்தி யெம்போல்வார் பாசமற விந்நூல்
துணிந்தளித்தேன் ஞானிகண்முன் சூழ்ந்து. (உஅ)

எக்குலத்தா ரேனு மெமக்கவற்றி லையமிலை
மிக்கறிவைக் கண்டு விடுவாரேல்—தக்கவரா
மன்னவர்தா ளென்சிரசா லாரப் பணிந்திந்நூ
லுன்னவளித் தேன்றுறவ ரோர்ந்து. (உகூ)

எம்மதத்து நீத்தா ரெனினுமறை நூலேற்குஞ்
செம்மையறி வுற்றுமனச் சிக்கறுத்தா—லம்மம்ம
வத்துறவர் தாணினைந் தாட்டுவினை பாழாக்க
வித்துறவு நூலளித்தே னேய்ந்து. (௩0)

---

# நூற்காரணம்.

நில்லார்போற் காட்டி நடிக்குங் கயவருக்கு
நல்லறிவு கண்ணாடி நானாகிச்—சொல்லார்
துறவு நிலைவிளக்கஞ் சொன்னேன் துறவர்
திறநிலையைக் கண்டு தெளிந்து. (௩க)

பொய்யர் குணமெழுதப் போதெவர்க்குச் சித்திக்கு
மெய்யரடி சிந்தித்த மெய்த்தவத்தாற்—றுய்ய
வறிவுவடி வானா ரருளா லமையக்
குறியாச் சிலவுரைத்தேன் கோத்து. (௩௨)

பொய்த்துறவோர் தஞ்செயலைப் புக்காய்ந் தெழுதுவதான்
மெய்த்தவங்கள் வீணாய் விடுமேனு—மெய்த்துறவர்
சீர்த்தியுஞ் செப்புதலாற் றேயுமப் பாவமென்றே
யார்த்தியொடு சொல்வே னமைந்து. (௩௩)

சுயம்பாய்ப் பரமாய்ச் சுயஞ்சோதி ரூப
வயமாத்மாப் பிர்ம வறிவாப்—பயமகல
வானா ரதனை யறையா விடினேனோர்
நானாப் பிறப்புறுவார் நைந்து. (௩௪)




ஆனதனால் யானு மறிந்த வணஞ்சொன்னே
னீனமுற வென்னை யிகழாதீ—ரூன
மனத்துடிப்பை நீக்கிவிடின் மாத்துறவுண் டாகுஞ்
சினத்தைவிடுத் தார்க்கிதுவே தீர்வு. (௩௫)

கணங்கொண்ட பொய்த்துறவர் கண்டவர்தந் தாளை
வணங்கி யவர்சொல் வகையை—யிணங்கியான்
கேட்டகற்றி நல்லாரைக் கிட்டிநன் ஞானமுற்று
நாட்டுகின்றே னீத்தார்சீர் நன்று. (௩௬)

---

## அவையடக்கம்.

---

ஆயிரத்து முந்நூற்று முப்ப தருங்குறட்பா
பாயிரத்தி னோடு பகர்பரனே—தூய
துறவினர்க்கொப் பில்லையெனச் சொற்றிட்டால் கல்லாச்
சிறியனென்ன சொல்வேன் றெளிந்து. (௩௭)

துறவர்சீர் சுத்தர்முன் சொல்வதரி தென்னத்
திறவறிவில் லாதயான் செப்ப—லெறும்பு
சிறுகரத்தா லேழ்கடலைச் சிந்தா திறைக்க
வுறுதிசெய்த தொக்கு முருத்து. (௩௮)

எங்கு மிருந்தொளிரு மெம்பகவான் வேடத்தால்
தங்காது மெய்யென் றலையடியேன்—தூங்க
வுளத்திருந் தோதென்ன வோதினே னிந்நூ
லுளத்துருவை நன்று வுணர்ந்து. (௩௯)

துய்ய துறவுடையார் தோத்தரிப்பா ரிந்நூலை
வெய்ய துறவர் வெருண்டுரைப்பார்—மெய்யதுணர்
வில்லாத குற்றத்தா லென்செய்வார் முன்செய்த
பொல்லா வினைப்பயனாற் புக்கு. (௪௦)

துக்கசுக மீதென்று சூழ்ந்தறியாப் பொய்வேடர்
தக்கநூ லீதென்று தாங்கொள்ளார்—தக்கன்மு
னெக்கலையும் போற்றுகின்ற வீச்சுரனை நிந்தித்துத்
துக்கமுற்றா ருணரார் சோர்ந்து. (௪௧)

எத்துறவர் தாளுமன்போ டேத்திப் பணிந்தடியேன்
தத்திச் சிறார்சொலல்போல் சாற்றிந்நூல்—சுத்தமுறு
நூலெனவே கொள்வாரோ நுட்பமறி யாத்துறவர்
நூலெமக்கே னென்பாரோ நொந்து. (௪௨)

இல்லி லுறுகின்றா னேதோசொன் னானென்று
சொல்லிழுக்குச் சொல்லாதீர் தூயவரே—பொல்லா
மனமழிக்கா தார்க்கே வழுத்தினே னிந்நூல்
மனமழித்த தாலே மதித்து. (௪௩)

துறவின் பெருந்தகைமை சூழ்ந்தறியா தந்தோ
துறவினர் போனடிக்குந் தூர்த்தர்—துறவு
நிலைவிளக்க நூலதனை நிந்திப்பார் தூயோர்
தலைமிசையே கொள்வார் தழைந்து. (௪௪)

தாம்பெற்ற வின்பஞ் சகமூன் றுந் தாமடையத்
தேம்பு மனமழித்த சிற்சொருபர்—மேம்பட்டா
ரொப்ப வுரைத்திடுவா ரொப்பொடுயர் வற்றதனைத்
தப்பின்றிக் கண்டதனாற் றான். (௪௫)

# நூல்.

---

தத்வமசி யென்னுந் தனிமறையின் லட்சியத்தைச்
சித்துருவாந் தேசிகன்றாட் சேர்ந்துபணி—நித்தமுமே
செய்துணர்ந்து தம்மைச் சிவமாகக் கண்டவரே
மெய்ய துணர்துறவர் மேல். (௧)

மெய்ய துணர்வார் மிளிர்வா ரறிவுருவாய்
அய்யமறச் செல்வா ரருணெறியில்—மைய
லறவெவர்க்கு முண்மைநிலை யன்பாகச் சொல்வர்
திறவருள்சேர் மெய்த்துறவர் தேர்ந்து. (௨)

உண்மை நெறியுரைப்பா ரோடித் திரிந்தலையார்
வண்மைவாழ் வுற்றிங்கு மாண்டார்போ—லண்ணலடி
யொன்றல்லால் வேறே யுளந்தன்னி லூன்றார்க
ளொன்றுமன மெய்த்துறவ ரோர்ந்து. (௩)

உடம்பு ளிருக்கு முணர்வுயா மென்பார்
கடமொத்திங் கூறற் கனத்த—வுடம்பி
னினைவின்றி நிட்டையினை நித்தமுமே செய்வார்
பினையகன்ற மெய்த்துறவர் பேண். (௪)

மனத்தை யடக்கிடுவார் வன்பொறிப்போக் கில்லார்
கனவறிஞர் காணின் கசிவா—ரனமுனுங்கா
லாரியருக் கர்ச்சிப்பார் யாவுமே யீசனென்பார்
சீரறிவார் நற்றுறவர் தேர்ந்து. (௫)

பாமரர்போற் றோன்றுவார் பன்னூ லுணர்ந்திருந்துந்
தாமரைநீ ரொப்பச் சகத்துறுவார்—காமந்தான்
வந்தா லுடனழிப்பார் வையகத்தார் போற்செருக்கா
னந்தார்கண் மெய்த்துறவர் நாடு. (௬)

கண்ணாகத் தம்வடிவைக் காமமற்றுக் கண்டோர்க
ளண்ணாந்து நோக்கா ரயலையென்றும்—விண்ணாள்வான்
வந்தொன்று தந்தாலும் வாங்கார் பரவெளியாச்
சந்ததமு நிற்பார் தழைந்து. (எ)

காமமற் றாரே கடுந்துறவ ராவரவர்
நேமமா வேத நெறிநிற்பார்—வாமமுறப்
பேரின்ப வாழ்வு பெறுவார் குருகருணை
நேரிலதாக் கொள்வார் நிலத்து. (அ)

துறவரா வசர்கள் சுயவறிவா நிற்பார்
மறவினைகள் செய்திடவே மாட்டார்—திறமாப்
பசியொன்றே காண்பார் பணியார்பொன் கேட்டுக்
கசியவறஞ் சொல்வார் களித்து. (௯)

மனம்பலவாச் செல்லவிடார் மாதர்பாற் சேரா
ரனமதிக மாக வருந்தார்—தினமுமே
சென்ற விடஞ்செல்லார் சேரும்பல் பற்றென்றே
யொன்றுமன மெய்த்துறவ ரோர்ந்து. (௧௦)

துறவ ரெனப்படுவோர் தூய்மைநெறி நிற்பார்
துறவ ரெனத்தம்மைச் சொல்லார்—துறவரெனச்
சொற்றிட்டாற் பற்றடுக்குந் தூயநிலை தேயுமெனப்
பற்றகன்று நிற்பாரிப் பார். (௧௧)

வாக்கான் மனத்தால் வரையறுத்துக் காணவொணா
தேக்கறிவா நிற்கின்ற செல்வர்தாங்—காக்கும்
பொருளா யடக்கத்தைப் போற்றிடுவா ரன்னோர்
மருளா ருலகான் மனம். (௧௨)

தற்பெருமை யாவரையுந் தாக்கி யழிக்குமெனத்
தற்பெருமை காட்டார் தவத்துறவர்—தற்பெருமை
தன்னாற்கெட் டோர்க டவத்துறவ ரல்லாதார்
பன்னேக்கங் கொண்டுட் பதைத்து. (௧௩)

கள்ளுண்ணார் காரிகையைக் கண்ணெடுத்துப் பார்த்திடார்
வள்ளுவர்நூல் சொல்லும் வழிநிற்பார்—கள்ளநெஞ்சைச்
செல்லவிடார் கண்டவிடந் தேசிகன்சொற் போனடப்பார்
கொல்லையற்ற மெய்த்துறவர் சூழ்ந்து. (௧௪)

பொன்னை நினைந்தழுங்கார் போக நினைந்துருகார்
பின்னை விளைவினையும் பேணார்க—ளென்ன
சுகதுக்கம் வந்தாலுந் தொல்லைவினை யென்றே
யகமகிழ்வார் மெய்த்துற வார்ந்து. (கரு)

வெறுத்தமுகங் காட்டிடார் வெற்றுரைகள் கூறார்
நிறுத்துவார் நெஞ்சை நிலைக்க—மறுத்தநெறி
சேரார் சிவமே செகமெனக் கண்டிருப்பர்
சீரார்ந்த நற்றுறவர் தேர்ந்து. (கசு)

பேச விரைந்திடார் பேருணவுங் கொண்டிடார்
பாசமனை மக்களிடம் பற்றுவையார்—நேசத்தைப்
பாரிடத்து வைத்துப் பராக்கா விராரென்றுஞ்
சீருடைய மெய்த்துறவர் தேர்ந்து. (கஎ)

மெய்த்துறவர் தஞ்சிரந்தான் வீழவரும் வேளையினும்
பொய்ச்சொற் றுணிந்து புகலாரே—பொய்ச்சொல்லா
லிம்மைப் பழிமறுமை யெய்துமே பாவமெனச்
செம்மைமொழி சொல்வார் தெளிந்து. (கஅ)

சகம்பொருளாக் கண்டிடார் சாந்தநெஞ்ச ராவார்
சுகசொருபம் வேறுளதாச் சொல்லா—ரிகபரங்க
டம்மையன்றி யில்லையென்பார் சாயிவே றுள்ளதென்னார்
செம்மை நெறித்துறவர் தேர்ந்து. (கக)

மேத்தென்ற சொற்புகல்வார் மேதக்கோர் தாமென்னார்
சுத்தநிலை தன்னிலென்றுஞ் சோர்வுறார்—பித்தரைப்போன்
முன்னுக்குப் பின்னே முரண மொழிபுகலார்
சின்மயரா மெய்த்துறவர் தேர்ந்து. (உ0)

பொன்னைப் புகழ்ந்துரையார் பொய்யர் முகம்பாரா
ரென்னவிடர் ஞால மிழைத்தாலு—மன்னதனை
நாதன்செய் சோதனையா நன்றென் றுளமகிழ்வர்
காதலற்ற மெய்த்துறவர் காண். (உக)

சாயையெனக் காண்பார் சகமுழுதும் யாதறினு
மாயைவய மாகார் மனங்கோணார்—வேசையிகர்
தோளியரை மாதாவாய்ச் சோதரியா வெண்ணிடுவார்
கோளியற்றார் மெய்த்துறவர் கூர்ந்து. (உஉ)

நன்றியற்றுத் தீயர்பா னட்பொருபோ துங்கொள்ளார்
பொன்றருவார் தம்மைப் புகழ்ந்துரையா—ரென்றுமன்ன
மொன்றல்லால் வேண்டா ருணர்வாத் தனித்திருப்பார்
கன்றலிலா மெய்த்துறவர் காண். (௨௩)

ஊமரைப் போல்வா ருயிரற்றார் போற்கிடப்பார்
நேமமா நிற்பார் நிலையதனிற்—காமகுணம்
வந்தான் மயக்கமுறார் மாண்பார் சிரவணத்தாற்
பந்தமற்ற மெய்த்துறவர் பார்த்து. (௨௪)

அறிவா நிலையி லகலா திருப்பார்
பொறிவாயிற் சென்று புழுங்கார்—தறிபோல
நெஞ்ச மடக்கிநிட்டை நேர்மையாச் செய்திடுவார்
வஞ்சமற்ற நற்றுறவர் வாய்ந்து. (௨௫)

மனங்கோணிற் றப்பாது வன்பொறிகள் கோணுங்
கனங்கோணு மந்தக் கரண—வினங்கோணு
மாதலா னெஞ்சை யடக்கியறி வாய்நிற்பார்
மாதவத்து மெய்த்துறவர் மன். (௨௬)

எல்லா மறிந்தேம்யா மென்றுரையா ரெஞ்ஞான்றுங்
கொல்லா விரதமதே கொண்டிருப்பார்—பொல்லா
மனமடங்கி நின்றிடவே மாநிட்டை செய்வார்
சினமகன்ற மெய்த்துறவர் தேர்ந்து. (௨௭)

பூதம்யா மல்ல பொறியாதி யாமல்ல
ஏதமற்ற சாட்சி யெழிற்சிவமாங்—கோதற்ற
சோதி சொரூபம்யா மென்று துணிந்திருப்பார்
கோதில்லா மெய்த்துறவர் கூர்ந்து. (௨௮)

உடம்பும்யா மல்ல வுலகும்யா மல்ல
வடங்காக் கரணமும்யா மல்ல—மடங்கலந்த
மாயையுநா மல்லவென்று மாநடனஞ் செய்திடுவார்
சேயைநிகர் மெய்த்துறவர் தேர்ந்து. (௨௯)

பிரமம்யா மென்றும் பிராந்தி யுலகஞ்
சரவசரஞ் சங்கற்ப சாலம்—கரணமுறு
வாதை யிலையென்று வாய்ப்பாய்ப் புகன்றிடுவார்
தீதையகன் மெய்த்துறவர் தேர்ந்து. (௩0)

உடம்போ டிருந்து முடம்பைக்கா ணுது
திடவறிவா நிற்கின்ற தீரர்—மடமகன்ற
மெய்த்துறவ ராவரென மேதினியு மேலுலகு
மொய்த்துரைத்துப் போற்றிசெயு முன். (ருக)

அகண்டமாத் தம்வடிவை யாங்காங்கு காண்பா
ரிகபரத்தி லிச்சைவையா ரென்றுஞ்—சுகந்தா
னுணர்வலா லில்லையென்பா ருண்மைத் துறவ
ரிணர்மலர்கொண் டன்னவர்தா ளேத்து. (ருஉ)

இகபரம னைத்தினுமே யேகவெளி யாகத்
திகழுவ தான்மாவாந் தேவென்—றகமமதை
சற்றுங்கொள் ளாது சதாநந்த மாயிருப்பார்
பற்றகன்ற மெய்த்துறவர் பார்த்து. (ருரு)

சோதித் தறிந்தவணுஞ் சுத்த பரவெளியா
வாதித்தன் போற்றம்மை யாய்ந்துணர்ந்தோர்—கோதற்ற
வுண்மைத் துறவரவ ருற்ற விடமெல்லாம்
வண்மைத் தலமெனவே வாழ்த்து. (ருச)

ஆண்டா னடிமையும்யா மாதியந்த மற்றவன்யாந்
தூண்டா விளக்கனைய சோதியும்யா—மாண்டாவு
மேதினியும் யாமென்று மெய்ந்நிலையைக் கண்டவரே
கோதகன்ற மெய்த்துறவர் கொள். (ருரு)

எல்லா மறையு மியம்புகின்ற வீசனும்யா
மெல்லாமா யென்று மிருப்பம்யாஞ்—சொல்லார்ந்த
வெல்லா வுயிரும்யா மென்றறிந்த மெய்த்தவரை
நல்லாரா மெய்த்துறவர் நாடு. (ருசு)

திரியுலகாண் டாரைச் சிறுதுரும்பாச் செய்த
விரிமனத்தின் செய்கை விலக்கி—நரியுண்ணு
நாற்றப் பிணவுடம்பை நானென்று தேயிருப்பார்
ஓேற்றமற்ற நற்றுறவர் தேர்ந்து. (ருஎ)

வாய்கொண்ட மட்டுமா வாபோ விருவென்னுர்
நாய்போல விட்டவற்றை நன்றுண்பார்—பேய்மனது
கிட்டவரக் கண்டாற் கெடுவாய்நீ போவென்பார்
சுட்டற்ற மெய்த்துறவர் சூழ்ந்து. (ருஅ)

ஓரிடத்தி லேயே யுறர்பற் றறுமென்றே
யோரிட முங்குறிவைத் தன்னார்கண்—மாரியொத்தே
யெவ்விடத்துஞ் சென்றருளை யேக்கமொழி யச்செய்வர்
கவ்வையற்ற மெய்த்துறவர் காண். (௩௯)

கல்லாரோ டொத்திருப்பார் கண்ணோட்ட மில்லாரைப்
பொல்லாராக் கொள்ளாது பூரிப்பா—ரெல்லார்ந்த
நன்மையே யெல்லார்க்கு நாளுமே செய்திடுவார்
சின்மயரா மெய்த்துறவர் தேர்ந்து. (௪௦)

ஆளாற் பணிக ளகிலத்தார் பார்ப்பதுபோ
லாளா மனத்தைத்தா மாக்கியே—தாளார்ந்த
வன்பரவம் போக்க வருளுபதே சஞ்செய்வா
ரின்பமுற்ற மெய்த்துறவ ரேய்ந்து. (௪௧)

உடம்பற்றுத் தீய வுளமற்று மிக்க
வடலுற்ற வாங்கார மற்றுப்—படபடெனப்
பேசுவது மற்றுப்பல் பேதநெறி யற்றவரே
தேசுற்ற மெய்த்துறவர் தேர். (௪௨)

வஞ்சகமாப் பேசார்கள் வாழுநெறி போதிப்பா
ரஞ்சு மடங்கவறி வாகிற்பார்—பஞ்சாக
மண்ணுலக வாழ்வை மதித்திருப்பார் தம்வடிவை
விண்ணுருவாக் கண்டிருப்பார் மேல். (௪௩)

சான்றாண்மை குன்றார் தழைகுடும்பஞ் சார்ந்துநினுங்
கான்றசோ றுப்போகங் கண்டிருப்பா—ரான்றொளிரு
நல்லறிவாத் தம்மை நயமாக்கண் டின்புறுவார்
சொல்லரிய ஞானபரர் சூழ்ந்து. (௪௪)

சங்கற்ப மேயுலகஞ் சாட்சித்தா மென்றுணர்ந்தோர்
பங்கமுறார் தூய பளிங்கொப்பார்—சங்கற்ப
சாலமனை மக்களெனத் தாங்காண்பா ரெங்குநினு
மாலனுகார் தீதுசெயார் மன். (௪௫)

அலைவற்ற நெஞ்சத் தறிஞரெஞ் ஞான்று
நிலைபெற்றுச் சொற்றிடுவார் நீதி—மலைவற்ற
ஞானம் பெறவெவரு ஞானநூல் போதிப்பார்
ஞானநெறி செல்வார் நயந்து. (௪௬)

இம்மை யொடுமறுமை யிவ்விரண்டு மற்றநிலை
தம்மையே கண்டமுத்தர் சாந்தமுடன்—வெம்மையுறுந்
தீங்குலக வாழ்வைத் திரமாக நீத்திடென்பா
ரோங்கறிவா நில்லென்பா ருற்று. (சஎ)

தடிசாயை பாழ்மூன்ருச் சாற்றுகின்ற மூன்று
மடியா வறிவில் வறிதே—யிடிவானிற்
ருேன்றி மறைவதுபோற் ருேன்றி மறையுமென
வூன்றியுணர் வார்துறவ ருற்று. (சஅ)

ஆனத னாற்றுறவ ராயதிரை மூன்றையுமே
தானகற்றற் காவனவே தம்முளுன்னி—மோனமுட
ஞனந்தத் தூய வகண்ட சமாதிசெய்வர்
ஞானநெறி செல்வார் நயந்து. (சகூ)

கண்டவிடஞ் செல்லார் கருத்தோய நிட்டைசெய்வார்
பண்டைமறை யுத்திகளைப் பார்த்திருப்பார்—கண்டருடன்
சேரார்க டீயகுணஞ் சேர்ந்தழிக்கு மென்றஞ்சிச்
சீரார்ந்த மெய்த்துறவர் தேர்ந்து. (ரு0)

சாலம்போ லக்காண்பார் சந்ததமு மிவ்வுலகை
மாலற்ற ஞான மகிமையினுற்—கோலஞ்
சிறந்து மயக்கார் செகவாழ்வின் மூழ்கார்
துறந்த மனமுடையார் சூழ்ந்து. (ருக)

பற்றெழிந்த வுத்தமர்க்குப் பாவபுண்ணி யங்களிலை
பற்று வதனையென் றும் பற்றிடார்—முற்றுவன
செய்வார் மனத்தழுத்தார் தேயமிகழ்ந் தேத்திடினு
நய்யார் நிலைமாறி நாடு. (ருஉ)

அரசாட்சி செய்திடுவா ரையமெடுத் துண்பார்
திரசீவ முத்தராந் தீரர்—திரஞான
மில்லாதா ரீதறியா ரீதெல்லாங் கட்டென்பார்
பொல்லாங்கே செய்வார் புகைந்து. (ருங)

ஞானத்தான் மாலகன்ருேர் நாட்டா ருடன்கூடி
யேனையர்போற் கன்ம மியற்றிடினு—மோனநிலை
நீங்காது போகமுற்று நின்மலநெஞ் சோடிருப்பார்
தூங்கார் சகப்பற்றிற் ருேய்ந்து. (ருச)

கானடக்க வாராது கண்ணிருந்தும் பாராது
கானடையி லேதடுக்கின் கண்விழிக்கும்—வானிடிபோல்
வாய்திறந்து பேசாது வன்கரங்கள் சோர்ந்தசையுங்
காய்மனத்தை வென்றவர்க்குக் காண். (ருரு)

ஏதேது செய்தாலு மெவ்விடத்துச் சென்றாலுங்
காதேது கேட்டாலுங் கண்ணெதிரே—யேதேதும்
வந்தாலும் வாலறிவா மாறாது நிற்பாரே
நந்தாத மெய்த்துறவர் நாடு (ருசா)

உடம்போ டிருந்து முணர்வாயி னூரே
திடஞான முத்தரிது தீர்வு—குடநீருட்
கண்ட நிழலெப்பாக் காண்பார் சகமனைத்தும்
பண்டைமறை சொற்ற படி. (ருஎ)

பாலுடனே நீர்கலந்து பன்னுமன்ன முன்புவைத்தாற்
பாலுண்டு நீர்பிரிக்கும் பான்மைபோற்—சிலர்
சகமுதலாம் யாவுஞ் சடமெனவே நீத்துச்
சுகவறிவா நிற்பார் துணிந்து (ருஅ)

உலகம் பொருளாக வோடும் புலனோ
டுலவி யலையு முளத்தின்—கலகத்தை
விட்டகன்று ஞான விமலசிவ நாட்டமுற்ற
சிட்டரே மெய்த்துறவர் தேர். (ருகூ)

சிறுமை பெருமையுறுர் தேர்ந்த பெரியார்
மறுவற்ற ஞான வலத்தாற்—சிறுமைதா
னுற்றாலும் வாடா ருயர்செல்வம் பெற்றதனாற்
சற்று மகங்கரியார் தாம். (சா0)

அணுமயமா விவ்வுலகை யாய்ந்தறியார் சொல்லை
யணுவா மதித்திடுவ ரந்த—வணுவு
மறிவை விடவில்லை யவ்வறிவே தாமென்
றறிந்தடங்கு வார்துறவ ராய்ந்து. (சாக)

அணுமகத் தாப்பொருளை யாவலுறக் கொள்ளா
தணுமகத் தொன்று வறிந்தே—யணுமகத்துச்
சித்தையன்றி யில்லையெனத் தேர்ந்திருப்பார் மெய்த்துறவர்
மித்தையெலா மென்பார் வெறுத்து. (சாஉ)

எந்த விதத்துமுடலிங் கழியு மென்றறிந்து
நைந்துருகு மெய்த்துறவர் நாதனடி—சிந்திப்பார்
வாய்மை நிலைதவறார் வஞ்ச வினையெல்லாங்
காய்ந்தறிவா நிற்பார் கசிந்து. (சுங)

கடலலைபோ லெண்ணில் கடுந்துன்பஞ் செய்யு
மடமனத்தை மெய்யுணர்வாம் வாளால்—படபடென
வெட்டி யெறிவார் வெகுண்டுமுகங் கோணலிலார்
சுட்டிறந்த மெய்த்துறவர் சூழ்ந்து. (சுச)

இச்சையுற வெப்பணியு மென்றுமியற் றுதிருப்ப
ரிச்சை யுறவே யியற்றிலவை—லச்சையுறப்
பந்தத் தழுத்திப் பலபிறவி நல்குமென்பர்
பந்தமற்ற மெய்த்துறவர் பார்த்து. (சுரு)

காவிகண்டி நீறணைத்துங் காதலுட னேபுனைந்து
தாவுமனம் வென்றசாந் தத்துறவர்—கூவிநமன்
வந்தாலு மஞ்சார் வரவெம்பா னின்றனக்குச்
சொந்தமென்ன டாவென்பார் சூழ்ந்து. (சுசு)

சிறைவீடு விட்டுவெளிச் சென்றாரைப் போலக்
கறைசே ருடற்பற்றுக் கைவிட்—டுறைபெரியோர்
கூத்தாடி யேமகிழ்வர் கோதற்றே மென்றறிவர்
நாத்தழும்பப் பாட்டிசைப்பர் நன்கு. (சுஎ)

புலவர்பால் வாணியும் போதசிவ மான
திலகர்பால் வாணியொடு சேர்ந்து—மலமற்ற
ஞானசத்தி தானு நடித்திடுவா ளிவ்வுண்மை
ஞானசித்தர் காண்பார் நயந்து. (சுஅ)

முத்தர்கணூல் செய்வாரேன் முன்னுரைக்குந் தோத்திரத்தில்
வைத்திடுவார் தம்மருப வந்தனை—மத்தர்தா
மிவ்வுண்மை காணும லேதேதோ கற்பித்து
வெவ்வியரா லென்பார் வெகுண்டு. (சுகூ)

இன்சொல்லோ டீர மெழுத்தனைத்து மேயிருக்கு
நன்மனத்து ஞானிசொலு நற்கவியுட்—டன்னை
யறியா தவர்க ளறையுங் கவியி
லறியாமை யேயிருக்கு மாய். (எ0)

காலங் கருதிக் கழலடைந் தாரெவர்க்கு
மாலறவே போதிப்பார் வண்டுறவர்—ஞாலத்தா
ருற்றுச் சொரூபநிலை யோரா துழன்றிடுவார்
பற்றுடையா ரென்செய்வார் பார். (எக)

முன்னுடுபின் சோதித்து மூடமற்ற புத்திகண்டு
தன்னை யறிநெறியைச் சாற்றுவார்—கன்மமற
வல்லும் பகலு மகலாத சீடருக்கு
நல்லுண்மை கண்டார் நயந்து. (எஉ)

புகழார் சபையிற் பொருந்தியுளார் தம்மைத்
தகவார் சிவமெனவே தாழ்ந்து—பகலார்
மனமடக்கித் தத்துவத்தை வாய்மையுறக் கேட்பார்
கனம்பெருகு நற்றுறவர் கண்டு. (எங)

உள்ள முடைமை யுடைமையென வள்ளுவனார்
கள்ள மிலாமற் கழறுதல்கொண்—டுள்ளந்தான்
சாயாம னற்றுறவர் சாந்தி பெறுமுறையை
மாயா துரைப்பர் மகிழ்ந்து. (எச)

பெருமை பெருமிதமாப் பேசா ரவையிற்
பெருந்தகைமை வாய்ந்த பெரியா—ரொருமை
நிலைபிரியா தேயென்பார் நித்தலுமே நெஞ்சத்
தலைவறுக்கப் போதிப்பா ராய்ந்து. (எரு)

கல்லாரு நன்றுக் கசியப்ர சங்கத்தி
னல்லா ரநுபவத்தை நன்றுரைப்பார்—பொல்லார்தாங்
கற்ற செருக்காற் கழறுவார் நல்லுவமை
நற்றுறவர் போல நடித்து. (எசு)

பிரசங்கந் தன்னிற் பெருங்குரவன் றாளைக்
காஞ்சிரமேல் வைத்துக் கசிந்து—திரமா
வகம்புறமும் போற்றி யறைவார் நிலையைச்
சகமயக்கில் லாத்துறவர் தாம். (எஎ)

துறவரு மீசனுஞ் சூழின்வே றல்லர்
துறவரே யீசனெனத் தூய—வறவடிவாம்
வேத மெவர்க்கும் விளங்க வுரைக்குமிது
நீதகன்ற மாணு தெளி. (எஅ)

மனவரவைச் சங்கரனார் வண்பூணாக் கொண்டார்
மனவரவை ஞானிகளும் வாகாய்க்—கனவறிவாந்
தண்டா லடித்தணியாத் தம்வசம்வைத் தாரிதனைக்
கண்டா தரிப்பாய் கசிந்து. (எகூ)

மின்போ லுடம்பு விரைந்தழியு மென்றறிந்து
தன்னை யறிந்துய்யத் தாமக்க—ளின்னாற்
பிறப்பளிப்பா ரென்று பிணங்குடல்வீ ழாமுன்
றுறப்புற்றார் நல்லோர் துணிந்து. (அ0)

குடும்பவிட ரோர்ந்து குழுங்கித் துறவா
ரிடும்பைபல வுற்றேதுன் பில்லிற்—கடுவருந்திச்
சாவார்தூக் கிட்டிறப்பார் சார்ந்தமனை மக்கடுன்பாற்
சாவாமுன் னே துறத்தல் சால்பு. (அக)

பன்னிமக்க டுன்பப் படுகுழியை விட்டேறித்
தன்னிகரி லாத்துறவைத் தாங்கொண்டா—லன்னவரை
வாணி யிறைவன் வணங்கித் தொழுதன்பாற்
பேணிப் பெறுவனருட் பேறு. (அ௨)

பற்றகற்றி நெஞ்சிற் பரசிவன்றன் றாணினைந்து
சற்றுங் கலங்காது தன்னையறி—செற்றமற்ற
நற்றவரைக் கால னணுகா னவர்பாதம்
பற்றிப் பணிவான் பரிந்து. (அ௩)

பந்தமற்ற நல்லார் பதம்பணியு மன்பருக்குச்
சந்தப்பா பாடுந் தகுதியு—நிந்தையற்ற
செல்வமு ஞானத் திருவுமுறு மென்னிலவர்
வல்லமையார் சொல்வார் வகுத்து. (அ௪)

என்ன வுரைப்பே னெழிற்றுறவர் மான்மியத்தைத்
தன்னிலெழு மாநந்தந் தான்றதும்ப—வன்னியந்தான்
காணா திருந்திடுவர் காண்பாரா ரிவ்வருமை
மாணுகண் டர்ச்சனைசெய் வாழ்த்து. (அ௫)

சித்துருவா நல்லாரைத் தேடியவர் பாலோடிப்
பத்தியொடு பாதம் பணிந்துருகி—முத்தியுறு
நன்னிலையைக் காட்டி நமன்பயத்தைப் போக்கெனநீ
பன்னியழு தின்பமுறுவாய் பார். (அ௬)

ஞானிகளைப் போற்றுவதா னற்குணமொன் றுண்டாயின்
ஞானிகளி னற்குணங்க ளுமடைய—வானியிலை
சிந்தித்த பேறு சிதையாமற் பெற்றிடுவோம்
பந்தமெலா மோடும் பறந்து. (அஎ)

நல்லாரா லின்படையார் நானிலத்தி லாருமிலை
நல்லார் கனவினிடை நண்ணநீ—நல்லார்
திருவுருவைப் பூசித்துச் சிந்தனைசெய் மாணு
கருவகலு முத்தியுறுங் காண். (அஅ)

காவியங்கி பூதி கவினுருத்தி ராக்கமுடி
தாவுகுண்டி கையோகத் தண்டுகுழை—மேவுவெள்ளிப்
பூண்பா துகையணிந்து புல்லரையே மாற்றிடுவார்
மாண்பில்லாப் பொய்த்துறவர் மன். (அகூ)

பொன்னினைவே யுற்றிருப்பார் பொய்ப்பாக்கள் கற்றிருப்பார்
கன்னிமய லுள்ளே கரந்துவைப்பார்—தன்னினைவே
நீங்காது கொள்வார் நிலத்துயிர்கள் பாலருளைத்
தாங்காத பொய்த்துறவர் தாம். (கூ0)

பொய்த்துறவோர் தம்முகத்திற் பொற்பத்து வேனுமிரா
கய்த்த சினமே கவிந்திருக்கும்—பொய்த்தறரு
மூதேவி வாழ்வாண் முதல்வ னருள்சேரா
சீதேவி சீறிநிற்பா டேர்ந்து. (கூக)

வேதம் படிப்பார் வெகுளிதனை விட்டொழியார்
காதற்பெண் ணோடு கலந்திருப்பார்—சாதரு
னுண்மையெனக் காணு ருயரறங்கள் செய்திடா
ருண்மையுணா ரத்துறவ ரோர். (கூஉ)

கற்றுணர்ந் தேயடங்கல் கற்றவர்க்கு நல்லழகென்
றற்றவர்கள் சொற்றமுறை யாயாது—செற்றமொடு
பேசித்தஞ் சீர்த்திகளைப் பேய்போற்கூத் தாடிடுவார்
தேசில்லா மூர்க்கர் திகைத்து. (கூங)

உள்ளபடி தந்நிலையி லுற்றுருகாப் பொய்த்துறவர்
தெள்ளருளார் சற்குருதாட் சேர்ந்துய்யார்—கள்ளமனம்
போக்கார் படிப்பார் புநித ரநுபவத்தை
நோக்காது வீணலைவார் நொந்து. (கூச)

புன்னினைவே கொள்ளுகின்ற போலித் துறவிகடாம்
பொன்னுதவா தாரைப் புகைந்திகழ்வார்—மின்னார்கள்
நின்றவிடத் தக்கண்ணை நேர்செலுத்திக் காமுறுவார்
கொன்றருந்து வாருயிரூன் கூர்ந்து. (௯௫)

உலகத் தவாவுடலி னோகைமட வார்தங்
கலவிப் பிரியங் கரந்துள்—ளலகை
யெனவே பணம்பறிக்க வென்று மலைந்து
கனமிழப்பார் பொய்த்துறவர் கண்டு. (௯௬)

உலகமென்ப தற்கருத்த முன்னியுணா ராமற்
பலதலங்கள் சுற்றியே பாடிப்—பலபலவாஞ்
சித்தத்தைப் போக்காது செப்புவார் நீத்தாராய்ச்
சத்தறியார் பொய்த்துறவர் தாம். (௯௭)

மன்றாடிப் பொன்கேட்பார் மாறாயின் வைதிடுவா
ரென்றுமன முண்ப திலையென்பார்—துன்றயலார்
காணா வகையாகக் கஞ்சா வபினிதின்பார்
நாணாது பொய்த்துறவர் நன்கு. (௯௮)

ஞாயமல கள்ளு னயக்கவுண்ப தென்போமேற்
காயம் வலுத்தாற் கடவுளை—நேயமுடன்
போற்றற்கா மென்றே புதியவுரை கற்பிப்பார்
சீற்றமறாப் பொய்த்துறவர் தேர்ந்து. (௯௯)

வஞ்சத் துறவிகடாம் வந்தடுத்தார் தம்பொருளைத்
தஞ்சமாக் கொள்ளச் சழக்குரைப்பார்—நெஞ்சுருகிச்
செய்யுந் தருமஞ் சிதையப் பலசெய்வ
ருய்யுநெறி கூறா ருணர்ந்து. (௧00)

உண்முகமா நின்றறிவா யோகையுறா ரெக்காலு
மண்முதலா மூவாசை வாயிருப்பார்—கண்மூடிக்
காட்டி மயக்கிக் கருத்தறியா மக்கடமை
யாட்டிடுவார் பொய்த்துறவ ரார்த்து. (௧0௧)

கள்ளொடுசூள் கொள்வதிலை காய்கறியே தின்பமென்பார்
துள்ளுமனந் தன்னைத் துணித்தமென்பார்—தெள்ளறிஞ
ரென்போ லெவருமிலை யென்றுபுகன் றேமாற்றிப்
பொன்பறிப்பார் பொய்த்துறவர் புக்கு. (௧0௨)

கல்லாரை யேமாற்றக் கற்றுப்பொய் வேடமுற்று
நல்லார்போற் காட்டி நயமாக—வெல்லாந்
தெரியு மெனச்சொல்லிச் செம்பொன் பறிப்பார்
தெரிவில்லாப் பொய்த்துறவர் தேர்ந்து. (௧0௩)

உத்திக்கு மாறு வுளறுவார் பாப்பலவாச்
சத்துநிலை யீதென்று தாமுணரா—ரொத்துணரச்
சொற்றாலுங் கேளார் சுளித்திழித்துத் தூடிப்பார்
பற்றாழ்ந்த பொய்த்துறவர் பார்த்து. (௧0௪)

மனம்பறை யுள்ளடிக்க வாய்ஞானம் பேசித்
தனம்பறிப்பா ரேமாந்தார் தம்பாற்—றினமுலகிற்
பத்தியத்தோ டுண்ணார் பரத்தையர்நோக் காயிருப்பார்
மத்தகுணப் பொய்த்துறவர் மன். (௧0௫)

பெருந்தீனி தாந்தின்பார் பெண்முகங்கண் பார்த்தே
கரும்புதனைப் போலினிமை காண—வருங்கீதம்
பாடியப் பாவையர்கட் பார்வையறிந் தேயிரவிற்
கூடுவார் பொய்த்துறவர் கூர்ந்து. (௧0௬)

மாயைமனம் வேறென்பார் வையகத்தைச் சத்தென்பார்
வாயையடக் காதுபல வம்புரைப்பார்—மாய
மனத்தின் வழிநிற்பார் மாதவரை வைவார்
கனமகன்ற பொய்த்துறவர் கைத்து. (௧0௭)

ஆநந்தந் தன்னைவிட வன்னியமா வுண்டென்பா
ராநந்தந் தன்னறிவென் றுய்ந்தறியா—ரைனப்
புலன்பொறிக டம்வழியே போயலைந்து வாடி
நலனிழப்பர் பொய்த்துறவர் நைந்து. (௧0௮)

அசையா திருக்க வறியாரா நந்த
மசையா திருக்கி லடைவா—ரசையா
திருக்கு மிடந்தானே யின்பமெனக் கண்டோ
ரிருப்பா ரசையா தினிது. (௧0௯)

மாயமனம் வென்றார்போல் வஞ்சிக்கும் பொய்த்துறவர்
மாயமனச் சிக்கான் மயக்குற்றுக்—காய
மழியா வகைக்கா வவுடதங்க ளுடி
யழிவா ரறியா ரறிவு. (௧௧0)

கடுங்குணத்தை யுண்மறைத்துக் காமர்வே டத்தா
னடுநிலையுற் றார்போ னடிப்பார்—தடபுடலாச்
சொல்வார் சுகநிலையைச் சூழா ரிவர்தம்மிற்
கல்லாரே மேலென்பேன் காண். (௧௧௧)

கான மயினடத்தைக் கண்டுகெற்ற வான்கோழி
தானு நடிக்கின்ற தன்மைபோ—லீனர்தாங்
கற்றுச் சிலவற்றைக் கண்மூடிக் கற்றார்போற்
சொற்றிடுவார் பொன்பறிப்பார் சூழ்ந்து. (௧௧௨)

கோவின் மடங்கட்டிக் கோலக் குருபூசை
யோவிலன்பாற் செய்பவந் தோமென்பார்—காவிகட்டிப்
பூதியிட்டு மெய்யுரைப்போற் பேசுவார் பொய்த்துறவர்
நீதிநெறி காணார் நிலத்து. (௧௧௩)

பத்திரிகை யச்சிட்டுப் பாங்காப் பரம்பொருட்கு
நித்தியநை மித்தியங்க ணேராச்செய்—வித்திடற்குத்
தக்கபொரு ளில்லையெனத் தாமலைந்து வாங்கியுண்பார்
பொக்கமுள பொய்த்துறவர் போந்து. (௧௧௪)

வயிறு வளர்க்க வனைந்தாற்பொய் வேட
மயலார் பிறப்பிறப்பு மாயா—வயிறதனை
நாயும் வளர்க்குமே நும்வளர்த்த லோகட்டந்
தேயு மதித்துறவா செப்பு. (௧௧௫)

பாழ்வயிற்றை யோம்பப் பலப்பணிக டாமிருக்க
வாழ்ந்தவற்றை யெண்ணா தழிகாவில்—வீழ்ந்திடவோ
யீசன்போல் வேடமணிந் தேமாற்று வோர்க்கில்லை
பாச மறுத்தல் பகைத்து. (௧௧௬)

பொய்வேட நீத்துப் புனிதமா வுங்களைநீர்
மெய்யறிவாக் கண்டு விடுவீரேற்—பொய்வேடந்
தாங்கமன மொப்பீர் சகத்தோ ருறவுகொளீர்
பாங்காவீர் ஞானம் பதிந்து. (௧௧௭)

ஏட்டைப் படித்துரைப்பா ரெஞ்சா திறமாந்து
நாட்டை யகன்றுவெகு நாளாகக்—காட்டிலுற்றேம்
வந்தோமின் றிங்கு மடங்கட்ட வேண்டும்பொன்
றந்திடென்பார் பொய்த்துறவர் தாம். (௧௧௮)

வேதமுத னூலை விளங்காது கற்றிடுவார்
பாதகங்கள் செய்யப் பயப்படார்—மாதரெழிற்
கண்டுருகி நிற்பார் கருத்தடக்கி மெய்யறிவைக்
கண்டுய்யார் பொய்த்துறவர் காண். (கககூ)

அத்தனரு ணீறதனை யன்பா யணிதலிலார்
நித்தனடி சேர நினையார்கள்—பத்தி
சிறிதேனுஞ் செய்திடார் தீவினைகள் செய்வார்
வெறிநாய்நேர் பொய்த்துறவர் மிக்கு. (கஉ0)

பூதியக்கங் காவிப் புனிதமுண ராதந்தோ
வாதியன்பர் போல வணிந்தவற்றை—நீதியின்றிக்
பொய்க்கிடாமா நின்று புலான்மதுவு முண்போரே
பொய்த்துறவ ரென்னும் புவி. (கஉக)

கீழ்வெள்ளை மேற்காவி கேடிலக்க நீறுபுனைந்
தேழ்நிலமுங் கண்டார்போ லென்னெனவோ—கீழ்நேர்
வயிற்றை வளர்க்க வருப்பார் முரண
வுயிர்ப்பறியாப் பொய்த்துறவ ரோர். (கஉஉ)

பாம்பைப்பூண் டாடுநர்போற் பட்சமின்றிக் காவியக்கந்
தாம்புனைந்து மெய்த்துறவர் தம்மைப்போற்—காம்பீரப்
பேச்சான் மருட்டிப் பிழைக்கின்ற பொய்த்துறவி
ரேச்சே வருறுங்கட் கிங்கு. (கஉங)

பிரபலநா மங்கொள்வார் பேய்போற் பணத்திற்
கிரவுபக லாவலைவா ரென்றுங்—கரவகற்று
ராசையறுர் கோவண வாடையொன்றே பூண்டிடுவார்
வேசையர்நேர் பொய்த்துறவர் மிக்கு. (கஉச)

நடக்கின் மலந்ததும்பி நாறுடலைத் தானு
வடக்கமிலா ராகி யறைவார்—மடத்தைவிடார்
வேட்டியும் வெண்ணீறும் வெண்பல்லுங் காட்டிடுவார்
நாட்டமற்ற பொய்த்துறவர் நன்கு. (கஉரு)

வாக்குமன மெட்டாத வத்துபரி சோதனையாற்
றேக்கறிவாய் நிற்றற்குத் தேர்ச்சியுறார்—நாக்குருசி
யுற்றாரூர் தோறு முறுவா ருணர்வுபெறார்
பற்றறுக்காப் பொய்த்துறவர் பார்த்து. (கஉசா)

நல்லா ரெனக்கூற நாடகஞ்செய் வார்நன்னூல்
கல்லா ரகமமதை கண்டழிக்கார்—நல்லாரைக்
கண்டா லிகழ்வார் கடிநாயைப் போற்சீறிச்
சண்டாளப் பொய்த்துறவர் தாம். (கஉஎ)

பலகலைக ளன்றுப் படித்துரைப்பார் பேதம்
விலக வறிவுநிலை மேவார்—பலவாக
வோடு மனமடக்க வோர்ந்திடார் பற்பலபா
பாடுவார் பொய்த்துறவர் பார்த்து. (கஉஅ)

இச்சையிலார் வேடங்க ளென்று மணிந்திடா
ரிச்சையுளார் கூட்ட மிசைந்திடா—ரிச்சையுளார்
கண்டவிடஞ் சென்று கவின்கெட் டலைந்திடுவார்
தண்டனையெ லாமிவர்க்குத் தாம். (கஉகூ)

மனத்தின் வயமா மருண்டு திரிவார்
சினத்தை விடாத்துறவர் சீச்சீ—மனத்தினெறிச்
செல்லாம லெங்குஞ் சிதம்பரமா நின்றொளிர்வார்
நல்லாரா மெய்த்துறவர் நன்கு. (கநo)

சாக்கிரமுஞ் சொப்பனமுஞ் சாருஞ் சுழுத்தியுமே
தூக்கமற்ற தன்னுட் டிலங்குவதைச்—சாக்கியாய்க்
காண்பானே மெய்த்துறவி காணானே பொய்த்துறவி
மாண்பாகக் காணீ மதித்து. (கநக)

குருமார்க்கங் கொள்ளாரே கொள்வார்பொய் வேடங்
குருமார்க்கங் கொண்டவரோ கொள்ளார்—குருசொல்
கடவார் பெருநூல் கழறுநெறி நிற்பார்
திடஞான் மெய்த்துறவர் தேர்ந்து. (கநஉ)

பாசமற்றார் கோலம் பரிந்துகொளார் பொன்றேடார்
பாசமுளார் கோலம் பலபுனைவா—ரீசன்றன்
நல்லடியார் கட்கெல்லா நாமே குருவென்பா
ரல்லனனி செய்வா ரலைத்து. (கநந)

பிறப்புற்ற வாறறியார் பேய்போ லலைவார்
பிறப்பருமை கண்டார் பெரியார்—சிறப்பக்
கரணங் கடந்த கடவுளா நிற்பார்
மரணபய மற்று மகிழ்ந்து. (கநச)

4

அணுவா மதிப்பா ரயன்முத்தி தன்னை
யணுமகத் தாகா வறிஞர்—நணுமயலார்
பொய்த்துறவர் பூர்ணநிலை பெற்றவர்போ லேபேசி
யுய்த்துணர்வில் லாதழிவா ரோய்ந்து. (கருரு)

நோய்மயமே யிவ்வுடம்பு நுண்ணுணர்வோர் நன்றறிவார்
காய்மனத்துப் பொய்த்துறவர் காண்பரிது—தூய்தாநூல்
கற்பா ருடலசுத்தங் காட்டிவரு நோயுரைக்கா
ரற்பாப் பணம்பறிப்பா ராய்ந்து. (கருசா)

எவ்விதத்துந் துக்க மெனவறிவா ரிவ்வுடம்பைக்
கவ்வு மலமற்ற கண்ணுடையார்—கவ்வுமல
முள்ள துறவ ருலகுடலை மெய்யென்பார்
தெள்ளறிவைக் காணார் திகைத்து. (கருஎ)

சித்திரம்போ லுற்றிருப்பார் சித்தநிலை தாண்டினவர்
சித்தநிலை தாண்டாதார் சேர்க்கப்பொன்—னித்தம்
பசுப்புலித்தோல் போர்த்துப் பயிர்மேய்தல் போல
நிசித்தவினை செய்வார் நிலத்து. (கருஅ)

திருக்குறளைக் கற்றுணர்ந்தோர் சிக்கறவே யென்பார்
திருக்குறளிற் சொல்லடக்கந் தேறார்—திருக்குறளைக்
கற்றொழுகு வாரவையிற் கைநீட்டிச் சொற்பொழிவார்
பற்றறுக்காப் பொய்த்துறவர் பார். (கருகூ)

இறுமாந்து சொற்பொழிவா ரேயகுண மாறார்
கறுவார்ந்து கீழ்த்தொழில்கள் கண்ணி—மறுவில்
குருபணியுஞ் செய்யார் கொலையாதி போக்கா
ரருளற்ற பொய்த்துறவ ராய். (சு0)

அடக்கமிலார் சொற்பெருக் காலால மொக்கு
மடக்கமுளார் சொல்வ தமுதாந்—திடக்கல்வி
யுற்றிடினுஞ் சீரழிவா ருண்மையுணா ராத்துறவர்
சற்குருதாள் சாரார் தனித்து. (சுக)

பொன்னைத் தொளிர்ந்திடினும் பொன்னகா பித்தளைதா
னன்னதுபோன் ஞானி யருண்மொழிமுன்—றன்னுருவைக்
காணாக் கசடர் கடுமொழியென் னுமறிவாஞ்
சேணார்கற் றேய்த்துத் தெளி. (சுஉ)

தான்கற் றுரைப்பதுபோற் றானடங்கா தேசபையிற்
கான்மயிலைப் போலாடிக் கைந்நீட்டி—யூன்வடிவைத்
தானென்பான் பொய்த்துறவன் றானும் பொருள்காணான்
றானென்ப திவ்வுடம்போ சாற்று. (கசங)

சபைநோக்க மோராது சாலவிறு மாந்து
சபையோர்க் கடாவிடயஞ் சாற்றிச்—சபையோர்கள்
பற்பலவாச் சிந்திக்கப் பாடிப்ர சங்கிப்பார்
தற்சொருபங் காணா தவர். (கசச)

இன்சொ லுரை யாத்துறவ ரீரஞ் சிறிதுமின்றி
யென்சொல்லுக் கீடிங் கிலையென்றே—புன்சொல்
கடன்மடைதி றந்தாற்போற் காணப்ர சங்கந்
தடபுடலாச் செய்யிலென்னாஞ் சாற்று. (கசரு)

மணமார்ந் தொளிர்ஞான வண்மையிலார் சொற்கள்
பணமற்றார் சொல்லொத்துப் பாழாய்—மணலையொத்
தெட்டியையொத் தெல்லாரு மெள்ளுகின்ற நஞ்சையொத்து
நட்டந் தருமெனவே நாடு. (கசசு)

வடகலையுந் தென்கலையும் வாய்ப்பாட மாகத்
தடதடெனச் சொல்லிச் சடர்கள்—விடவிடக்கப்
பேசிப் பறிப்பார் பெரும்பொருளைப் பொய்த்துறவர்
வேசிக் கழிப்பார் மிக. (கசஎ)

கல்லுளமு நைந்துருகக் கற்கண்டு சீனியொப்ப
நல்லுவ மானமுற நற்கதைகள்—பல்லோருங்
கேட்டு மகிழ்ந்து கெடுக்கப் புலன்வழியை
யூட்டல் பிரசங்க மோர். (கசஅ)

உத்திக்கு மாறா வுவமைசொலிற் கேட்டிடுவோர்
பத்தியுறு மீசனருட் பார்வைபெறார்—புத்தியுற
நற்கதைகள் சொல்லியே ஞால மயக்கறுத்தா
னற்பிரசங் கம்மென்பார் நாடு. (கசகூ)

வேடரு நோயினரும் வெய்யகுணக் கள்வரும்
வேடத் துறவிகளு மேவவொப்பார்—காடிடிலோ
மானமின்மை பத்திய மாண்டிடுதற் கஞ்சாமை
யானமெய் யின்மையினா லாய். (கருo)

பொய்த்துறவு கொண்டுலவும் பொல்லாத வஞ்சகரே
பொய்த்துறவு நம்மைப் புழுநரகி—னுய்த்தழவே
வைக்கு மறுமையினில் வையத் திழிபிறவி
யுய்க்கும் விரைந்துய்மி னோர்ந்து. (கடுக)

மாதவவே டம்பூண்டு மாபாவஞ் செய்பவர்க்கு
யாதனு தேக மளித்துநமன்—றாதரிடஞ்
செக்கிட் டரைத்திடுங்கள் சேதியுங்கள் வாள்கொடெனக்
கொக்கரித்துச் சொல்வான் கொதித்து. (கடுஉ)

பொய்வேடங் காட்டிப் பொருள்பறிக்கும் பொய்த்துறவீர்
தெய்வநமன் மேலும்மைச் செந்தழலிற்—பெய்து
புழுநரகி லாழ்த்திப் புலானுடலை வெட்டி
கழுகிற் கிரையிடுவான் கைத்து. (கடுரு)

பற்றற்றார் போலப் பசப்பிப் பணம்பறிக்கும்
பற்றுடைய பொய்த்துறவர் பண்பனைத்தும்—பற்றற்றார்
கண்டவர்க்குத் தன்னுலகிற் காலன் கடிந்துரைக்குந்
தண்டனைநீ துட்கசிவார் தாம். (கடுச)

நித்த னுருவா நிகழ்த்துசைவ சாதனத்தை
யித்தரையி னல்லோரை யேமாற்ற—யுத்திபண்ணிப்
பூண்பார் நரகுறுவார் புன்பிறப்பை யேயடைவா
ருண்கிடையா தேயுழல்வா ரோய்ந்து. (கடுரு)

மயலற்றார் தம்மைப்போன் மாவேடம் பூண்டே
யயலவன்றன் றேவி யழகை—மயலுறவே
கண்டுமகிழ் பொய்த்துறவர் கண்டோர் நகைத்திகழ
மண்டனிலே வந்தழிவார் மற்று. (கடுசு)

காட்சியான் மாதவராக் காண்பிக்கும் வஞ்சகர்க்கு
மாட்சி யுடனவர்பூண் மாநீறே—சாட்சியாய்ச்
செய்தகுற்ற மவ்வளவுஞ் செப்பு நமனிடத்துக்
கைதையைப்போற் சொல்லா கரி. (கடுஎ)

பொய்த்துறவோர் கூற்றுவன்பாற் போய்ச்சேருங் காலத்திற்
கைத்தவர்த நெஞ்சுடனே காவியுமே—யெய்த்தலின்றிச்
சாக்கியாய்த் தப்பெல்லாஞ் சாற்றுஞ் சினந்தளறிற்
றாக்கியெறி வார்தூதர் சூழ்ந்து. (கடுஅ)

காவி பொருசாட்சி காதலுள மோர்சாட்சி
தாவிலக்க முந்நீறுஞ் சாட்சியொன்று—யாவிவிட்ட
வக்கணமே பொய்த்துறவ ராற்றுவினை கூற்றுவனுக்
கொக்க வுரைக்கு முருத்து. (கரு௯)

எறும்புமுதல் யானைவரை யென்னுமுயிர் செய்யு
மறம்பாவ மோர்ந்தே யரன்று—னறநெறியே
யின்பமுந் துன்பமு மீந்திடுவான் பொய்த்துறவீர்
வன்பவஞ்செய் யாதீர் மருண்டு. (கசு0)

ஆசையற்று ரென்றற் கடையாளங் காவிகட்டல்
பூசையின் செய்கை பொருந்தினரா—யாசையுளார்
காவிகட்டி லென்னபயன் காண்பார் நரகையலாற்
றீவினைசெய் பொய்த்துறவா தேர். (கசுக)

பூதிபோ லான்மா புனிதமா மென்பதுணர்ந்
தாதிசிவ னாகி யமர்தற்கே—யாதிமறை
பூதி புனையப் புகன்றதிவ் வுண்மைதனை
தீதியற்றும் பொய்த்துறவா தேர். (கசுஉ)

வேடத்திற் கொப்ப விமலவறி வில்லாரை
நாடகத்தார் கண்டு நகைத்திகழ்வார்—வீடடைய
வேடமுத லல்ல விராக முதலாகுந்
தோடமுறு பொய்த்துறவா சூழ். (கசுஙு)

ஆன்மா நமதுருவ மாகும்பொய் வேடங்க
ளான்மாவைக் காணற் கரணுகா—மான்மதியைக்
கண்டழிக்கா திவ்வுடம்பைக் காதலிக்கும் பொய்த்துறவர்
சண்டனுக்கா ளாவார் தளர்ந்து. (கசுச)

தாடி சடைநகந் தாம்வளர்த்து வஞ்சிக்கின்
றாடிசடை வேடமெனத் தன்னெஞ்சா—மாடி
யறிவிக்கும் பொய்த்துறவீ ராநந்த ரூப
வறிவை வளர்த்திடுமி னய்ந்து. (கசுரு)

துக்கந் தொடர்பாகத் தோன்றுமிடங் கண்டழிக்கார்
தக்க துறவரெனச் சாற்றிடுவார்—முக்காலுங்
கொக்காகா காகங் குளித்தாலும் பொய்த்துறவர்
மிக்காரா வாரோ விளம்பு. (கசுசு)

இன்றைக்கோ நாளைக்கோ வின்னுமரை நாழிக்கோ
பொன்றுமுடற் றன்மைதனைப் புந்திவையா—தென்றுமே
தாடிசடை காட்டிச் சகத்தைவஞ் சிப்பதுவோ
வீடிற் றுறவு விளம்பு. (கசுஎ)

நீத்தா ரதிகார நேமமாக் கற்றுரைப்பீர்
மாத்தா னவத்தைதனை மாய்த்திடீர்—நாத்தடிக்கத்
தோத்திரிப்பீர் தோத்திரிப்பான் றாய சொரூபத்தை
யேத்திடீர் காணீ ரியைந்து (கசுஅ)

மண்டையோ டெண்ணில வாகமயா னத்துருளல்
கண்டலறிச் சோர்ந்தக் கணத்தினே—பண்டைமறைக்
கேற்கப் பரவெளியை யேதமறக் காணும
லேற்கைநன்றே பொய்வேட மிங்கு. (கசுகூ)

மனத்திற் கழகறிஞர் வண்டா ணிணைத
வினத்திற் கழகறுத்த லேதங்—கனத்தபுகழ்
ஞானநூல் கற்றூர்க்கு நற்றுறவு பேரழகாங்
கோனவனுக் காமணிசெங் கோல். (கஎ0)

உடம்பிற்குத் தக்க வுணர்வுவேண் டாமோ
வுடம்புற்ற காரணத்தை யோர்ந்து—மடம்பாற
நிற்காது சித்துருவா நீளுடலைக் காத்திடலோ
வற்பார் துறவிற் கழகு. (கஎக)

கேட்டவர மீயாத கேடில்லா நெஞ்சையக
நாட்டமுறச் செய்தறிவா நண்ணும—லேட்டைப்
பிடித்துப் பொருட்காப் பிறர்க்குபதே சிக்க
நடிப்பதுதா னேதுறவு நாட்டு. (கஎஉ)

நலந்தீங் களிப்பதெது நம்மனமே யாகு
நலந்தீங் குமக்கில்லை நாடி—னலமொடுதீங்
கற்ற பரவெளிநீ ராயாத குற்றத்தாற்
பற்றுளர்போற் காண்பீர் பயந்து. (கஎங)

நல்லார்க்குந் தீயார்க்கு நாடிநலந் தீங்களிக்கு
மெல்லார்க்கு மேபொதுவா மிம்மனந்தான்—கல்லாத்
துறவ ரறியார்க ட்யேமனத்தின் றன்மை
திறவறிஞர் நன்றுணர்வார் தேர்ந்து. (கஎச)

கற்பகத்தை யொப்பாகுங் காய்துறவீ ரிம்மனந்தா
னுற்பவத்தை நீக்கி யொளிர்வித்துத்—தற்பரனுக்
காளாக்கு மத்தை யயலி லலையவிட்டு
வாளா பிறந்தழிவீர் மற்று. (௧௭௫)

ஆடையின்றிப் பொய்த்துறவ ரம்மணமா யுற்றாலு
மோடையுறு நீரொடிலை யுண்டாலும்—பீடை
யகலவான் மாவை யறியார் மயக்கம்
புகலதாக் கொள்வார் புலர்ந்து. (௧௭௬)

கோவணத்தோ டேர்தோறுங் குந்திடினுஞ் சுற்றிடினும்
வாவுமனம் போக்கும் வகையறியாய்—தாவுமன
நீக்கு முபாயத்தை நீகுருதாள் சேவைசெயின்
சீக்கிரத்திற் கண்டுய்வாய் தேர். (௧௭௭)

சாக்கிரத்தைச் சொப்பனம்போற் சர்வமித்தை யென்றுணரின்
சாக்கிரபோ கத்தடிப்புத் தான்மாறு—மாக்கருணை
யுற்றுரைத்தேன் பொய்த்துறவா வுன்ற னுளந்தெளியச்
சற்றிருந்து காணீ தனித்து. (௧௭௮)

விளக்கைப் பலவிட்டில் வீழ்ந்துமறைக் காவே
யளக்கரிய வான்மவடி வத்தைத்—துளக்கி
மறைப்பா ரிலைநினைவாம் வாசனையே யுன்னை
மறைப்ப ததனை மறி. (௧௭௯)

அக்கினிசேர் வைக்கோ லழிந்தொழித லுண்மையன்றோ
தக்கவனே யுன்சொருபந் தன்னினீ—சிக்கறவே
சாயாதெப் பக்கமுநான் சாட்சியென நிற்கிலறு
மாயா மயக்க மடிந்து. (௧௮௦)

அகண்ட வறிவொன்றே யழியாப் பொருளா
மகண்டவறி விற்கிலையொப் பாயி—னகண்டவெளி
தன்னைமறைப் பாரித் தரணியிலுள் ளாரேலுன்
றன்னைமறைப் பாருளராச் சாற்று. (௧௮௧)

தன்னிகரி னின்னுருவந் தானே யகண்டவெளி
யென்னினுனக் கீடா வெதையுரைத்த—லுன்னையென் றாஞ்
சுட்டியறி விக்கவொண்ணா சூதாம் புலனழித்து
நிட்டைசெய்து காணீ நிலைத்து. (௧௮௨)

துட்டமன மல்லநீ சொல்லிந் திரியமல
வட்ட வுருவா மறிவுநீ—யெட்டரிய
ஞான வொளிவெளிநீ நானீயென் பேதமற
ஞானநிட்டை கூடி யுண்மை நாடு. (கஅரு)

கற்பிப்பா னைவிட்டுக் காணுமை யாலுலகங்
கற்பிப்பா னேமுதல்வன் காசினிக்குக்—கற்பிப்பா
னுண்டே லுலகுண்டா முண்டுமற் றெப்பொருளு
முண்டுமறை யீச்சுரனு மோர். (கஅச)

தன்ம நெறிதவறுச் சற்குரவன் சொற்படியே
யுன்வடிவை நன்று வுணர்ந்துவிடு—னைந்நிலையுந்
தன்னி லடங்குந் தலைகாட்டா தெம்மதமு
முன்னியறி பொய்த்துறவா வுற்று. (கஅரு)

அத்துவித வத்துவா மாநந்த வாரறிவே
சத்தியமா நின்றன் றனிவடிவ—முத்திக்கு
வித்தவ் வறிவை விளங்க வறிவாயேல்
சத்துருவ மாவாய் தனித்து. (கஅசு)

கண்வாய் செவிமூக்குக் காண்பரிச நெஞ்சமா
மெண்ணரிய வாட்கட் கெசமானீ—யெண்ணிலவை
யுன்னு லுணரப் படுதலை யோர்ந்தகன்று
பொன்னு ரறிவாய்ப் பொருந்து. (கஅஎ)

பிறவற்றை நீக்கும் பெருஞான மில்லார்
துறவுறலால் யாதுபயன் றாய—துறவுடையார்
வாக்குமனத் திற்கெட்டா வத்துநிலை கண்டழியு
மாக்கையவா நீத்த லழகு. (கஅஅ)

மனிதரெனப் பேர்பெற்றூர் மாஞானங் கொள்க
மனிதரெனப் பேர்பெற்றூர் மண்ணில்—வனிதைமக்கண்
மாடுமனை தம்மையுன்னி மாழ்கி மடிந்திடலோ
தேடுபய னீயெனக்குச் செப்பு. (கஅகூ)

என்னதவஞ் செய்தோநீ யிவ்வுடம்பை யுற்றுவந்தா
யன்னதனுன் ஞான மதிவிரைவிற்—றன்னுதியா
னைநாளை யென்றுசொல்லி நாட்கழித்தா லேமன்வரும்
வேளையிலென் செய்வாய் விளம்பு. (ககூ0)

நம்பாதே நம்பாதே நாறுடலை நம்புவையேற்
செம்மையறி வெய்தவிடா சீரழிக்கு—மிம்மை
மறுமை வகைவகையா மாளாமற் கூட்டுஞ்
சிறுமையெலாஞ் செய்யுஞ் செறிந்து. (ககூக)

இக்கணமோ வெக்கணமோ விற்றுவிடு மிவ்வுடம்பென்
றிக்கணமே சிந்தி யியற்சிவமா—வெக்கவலை
வந்தாலு மஞ்சாதே வாய்மையே நானென்று
சிந்தித்தே யெத்தொழிலுஞ் செய். (௧௯௨)

இரும்பாக வுன்னுடம்பை யெண்ணாதே யென்று
மிரும்புநாட் பட்டா லிறுமே—விரும்பியே
பொன்னுடம்பு பெற்றவரும் புன்றுரும்பா மாண்டாரே
யின்னுடம்போ நிற்கு நினை. (௧௯௩)

இவ்வுடம்பு நீங்கியபி னெந்த வுடம்புறுமோ
விவ்வுடம்பே காணநமை யேய்ந்தவுடம்—பிவ்வுடம்பைப்
பெற்றதவந் தன்னைப் பெரிதுவந் தாய்ந்தக்காற்
பற்றுமன மேங்கியழும் பார். (௧௯௪)

மாதவத்தான் மாறுடராய் வந்துதித்தோம் பொய்த்துறவா
வாதவன்போ னம்மை யறிவதற்கே—யோதி
னுடம்பின்றேன் ஞான முயர்முத்தி யில்லை
யுடம்பழியு முன்னுணர்வை யோர். (௧௯௫)

உடம்பருமை கண்டோ ருறுவார்மா ஞான
முடம்பருமைக் கில்லைசொல வொப்பிங்—குடம்புதா
னீரிற் குமிழியின் னீங்காத நோய்த்துருத்தி
தேரிற்றெய் வீகந் தெளி. (௧௯௬)

எத்தனையோ புன்பிறப்பெ டுத்திளைத் திம்மனித
சுத்தப் பிறப்பெடுத்தோந் தொல்லருளால்—வித்தகமா
விவ்வுடம்பா லுன்வடிவை யேதமறக் காணுயே
லெவ்வுடம்பா லென்றுறுவா யின்பு. (௧௯௭)

நல்லவுடம் புற்று நலத்தோ டிருக்குமிந்நாள்
பொல்லா மனமழித்துப் புல்லுடனு—னல்லவெனச்
சிந்தனைசெய் வாயேற் றிருக்காத் திகழ்ந்திடுவாய்
பந்தப் பிறப்பறநீ பார். (௧௯௮)

கற்பகமும் பின்னாகுங் காணிவ் வுடம்பினுக்குப்
பொற்புநெறி செல்லாத பொய்த்துறவா—கற்பதரு
வுன்னுவன நல்கு முனைக்காட்டா திவ்வுடம்போ
நின்சொருபங் காட்டு நிசம். (௧௯௯)

பொன்னை யளிக்கும் புவிக்கரசு தானுக்கு
முன்னைவினை போக்க முயல்விக்கும்—பொன்னா
ரடையறஞ்செய் விக்கு மயன்மா லுலகும்
விடையனுல கும்மளிக்கு மேல். (உ00)

# வாழ்த்து.

சங்கரனார் தாள்வாழ்க சச்சிதா நந்தனடி
பங்கமற வாழ்கசுர பாத்ரரடி—துங்க
வவரடியார் வாழ்கவரு ளல்லமனர் வாழ்க
தவவாழ்வார் வாழ்க தழைந்து. (௧)

அய்ய மறுத்தென்னை யாநந்த முன்வடிவென்
றய்ய வருளீந்த வுத்தமனை—மெய்யாக்கண்
டெய்யவடி வாழ்க துரியாதீ தத்தொளிர்வோர்
செய்யவடி வாழ்க சிறந்து. (உ)

எம்மதத்து ஞானிகளு மென்னிதயத் தாள்வாழ்க
செம்மைநெறி செப்பமாச் செப்புநரு—தம்மறிவைப்
பூரணமாக் கண்டவரும் பொறப்பார் புராணமுட
பூரணமும் வாழ்க வமைந்து. (௩)

கல்லாதார் கற்றவர்கள் கற்புடையார் கற்பில்லார்
பொல்லா தனவகன்ற பொற்புடையார்—நல்லசிவ
ஞானமுற்று வாழ்ந்திடுக ஞானிகடாம் யோகிகடா
மேனையுயிர் வாழ்க வினிது. (௪)

சிவநேசர் சின்மயத்தர் சித்தமய லற்றோர்
தவநேச முற்றின்பஞ் சார்வோர்—புவனேச
நற்றுறவர் நல்லறிவி னுயேன்செய் நூலொடது
கற்றுரைப்போர் வாழ்க கனிந்து. (௫)




துறவுநிலை விளக்கம் முற்றிற்று.

பாயிரமுட்படச் செய்யுள் உ௫0.

சுபம்! சுபம்!! சுபம்!!!

தே. அ. சாமிகுப்புசாமி யவர்களியற்றிய

# புத்தகங்கள்.

| | | விலை அணா |
|---|---|---|
| 1. | குருஸ்தவம் | 1 |
| 2. | போத விளக்கம் | 2 |
| 3. | சொரூபாநந்த விளக்கம் | 1 |
| 4. | அனுபவாநந்த விளக்கம் | 1 |
| 5. | சாமி விளக்கம் | 1 |
| 6. | திருவள்ளுவர் தோத்திர விளக்கம் | 1 |
| 7. | கற்பு விளக்கம் | 3 |
| 8. | அன்னதான விளக்கம் | 2 |
| 9. | கருணை விளக்கம் | 2 |
| 10. | நன்மதி தீபம் | 4 |
| 11. | விபூதி விளக்கம் | 4 |
| 12. | ஞானசார விளக்கம் | 1 |
| 13. | துறவுநிலை விளக்கம் | 4 |

ஷை விளக்கங்களும் தீபமும் அரியபெரிய தத்துவ ஆராய்ச்சிகளையும், நீதிகளையும், பல வித்துவான்களின் அபிப்பிராயங்களையும் பெற்று, வெகுஜன சமுகத்தில் புலவர் பலரால் அரங்கேற்றஞ் செய்யப்பட்டனவாம்.

இந்நூற்களின் விக்கிரயப் பொருள், இந்நூற்களின் ஆசிரியர் நடாத்தும் ஸ்ரீ சச்சிதாநந்தசுவாமிகளின் குருபூஜை கைங்கரியத்திற்கே உபயோகிக்கப்படுவதால், இவற்றை யாவரும் வாங்கிப் பெரும் புண்ணியத்திற் காளாவார்களெனத் திருவருளைச் சிந்திக்கின்றனன்.

## புத்தகங் கிடைக்குமிடங்கள்.

ரிப்பன் பிரஸ், சென்னை.

கோ. வடிவேலு செட்டியார்,
கோமளேசுவரன் பேட்டை,
சென்னை.

வே. சோக்கலிங்கம் பிள்ளை,
சுருட்டு ஷாப், பொறையாறு,
தரங்கம்பாடி போஸ்டு.

தே. அ. சாமிகுப்புசாமியவர்கள்
36, ஸ்ரீ சச்சிதாநந்த சங்கத்தலைவர்
வெங்கடேச பத்தன் வீதி,
பெருமாள்பேட்டை,
வேப்டேரி போஸ்டு, சென்னை.

இங்ஙனம்,
காளத்தி - இ - சிதம்பரசாமி புராணிகர்,
7, மணிக்கார செளல்டிரி ரோட்,
இராயபுரம் போஸ்டு, சென்னை.